# புல்லில் உறங்கும் பனித்துளிகள்

# அமாவாசை இரவுகள்

---

நிலவொளியில் , நிலாவெளியில் -இரவும்
நிலவுமாய் இணைந்து உலாவி
கரையும் அலையுமாய் அணைத்துக் குலாவி
வளர்ந்த காதல் முதலிரவில் கனவானது

நள்ளிரவில் அலைபேசியில் அழைத்து
முகம் பார்த்து கதைத்துச் -சூடான
முத்தங்கள் பரிமாறிச் சுவைத்து-விடியும்வரை
உறவாடி வியந்து பூத்த காதலும் வாடிப்போனது
நெஞ்செழுதிய கவிதையும் ஈரவிழிக் காவியமானதே!

அழகிய அண்மகன் இவன்-ஆண்மையோடு
பெண்மை எனை ஆளவந்த காதல் தலைமகன்
கவிதை எழுதி களித்த கன்னிமயில்
கடல் கடந்த நாட்டில் காதலாகிப் புரிந்த கடிமணம்

ஒரு பூவாய் மலர்ந்தவள்
கனிதரும் தாய்மைக்காய்த் தவமிருக்க
ஆண்மையும் , நாணிப் பெண்மையும்
சங்கமிக்கும் ஆனந்த முதலிரவு அன்று

வீணையாய் மீட்டுவான் எனக் கலைவாணியும் நினைத்திட
தந்தி அறுந்திடச் சுருதி கலைத்தான் இசை ஞானம் இல்லாத மூடன்,
வேனுகானம் இசைப்பான் கோபாலன் என ராதையும் ஏங்கிடக்-
காம வேட்டையாடி வேட்கை தணித்தான
கானம் அறியாத காமுகன்

அள்ளி அணைத்த அணைப்பில்-ஆண்மையின் பலம் தெரிய
பெண்மையின் நளினம் அழிய-அள்ளிச் சொரிந்த முத்தங்களில்-
மதுவும் புகையும் மணந்து நாறி வயிற்றை குமட்டிட
புயலாய் உழுது-சலமாய் விந்தைக் கழித்துப்
புழுவாய்ப் பக்கத்தில் உறங்கிட-கண்ட கனவு கலைந்தது
நிலவில்லாத் தேனிலவாய் முதல் இரவு கற்பழிப்பாய் முடிந்தது

ஓர் இரவில் வாடி உதிர்ந்து சருகான காதல் உறவு
விறைத்த குறி ஒடுங்கி விலங்கு அடங்கிட
விரித்த படம் அடங்கி பெட்டிப் பாம்பாய் உறங்கிட
விந்து நனைத்த மேனி அருவெறுப்பாய்த் தோன்றியது

வியர்வை பூத்த மேனி நனைந்து நாறிட
பூக்க துடித்த மலரே வாடிப்போனது
தாய்மைக்காய்த் தவமிருந்த கன்னி மனமோ
பாலியல் வன்முறைக்குப் பலியானது.

கண் கலங்கிட-கவிதை மறந்திட
இதுதான் காதலா? எண்ணியழுத மனம்
தொடர்ந்த இரவெல்லாம் கற்பழிப்பாய் மாறிட
காதலின் இனியபரவசம் காணாத குருடியாய் தாம்பத்யம்

விந்து நனைத்த போர்வையும், விறைத்த குறி உழுத மேனியையும்
விடியலில் நாளும் துவைத்துக் கழுவி அருவெறுப்பை களைந்து களைக்க
கறைபட்ட உடலும், நொருங்குண்ட இதயமும்
அலைபாய்ந்து கரைசேர தவித்தன.

உயிர் மெய் ஒருங்கே சேரும் உன்னத உறவு
ஒவ்வோர் இரவும் அசிங்கப்படத், திருத்தப்படாத
கவிதையாய், முடிக்கப்படாத பாடலாய் போன வாழ்வு
விக்கித்த மனம் கல்லாகிட-விலைமாதின்
வாழ்வாய் உருவழிந்த தாம்பத்தி உறவு?

காதலின் உச்சப் பரவசம் காணாத பெண்மை-
இரவில், கணவனின் பாலியல் வல்லுறவால்
சிதையும் உண்மை! யாரறிவார்?

மணமாலை சூடிய பெண்மை, மணமிழந்து வாடி நாறிட
மாங்கல்யம் கழுத்தை இறுக்கும் தூக்கு கயிறாய் மாறிட
கானம் பாடி உலாவந்த கவிக்குயில் கானம் மறந்து
இறக்கையிழந்து, கல்யாணக் கூண்டுக்குள் சிறையானது.

காதல் கீதமும் வெறும் கனவானது
கலவி உச்சம் காணாது-கற்பழிப்பாய் மாறிட்ட
கணவன் மனைவி உறவு
நிலவில்லா வானின் அமாவாசையிரவு
நித்தம் நெஞ்சுக்குள் முனகும் முகாரியின் வரவு

ஆண்டுகள் பல கழிந்திட, அருவியாய்க்
கொட்டிய கவிதையும் வற்றிட
காதலும் செத்து, கலவியும் பொய்த்து
ஊடலும் ஒழிந்து, சாதலாய் வாழ்வது வாழ்வா?
அசையும் சொத்தாய் மனைவியை
அழித்திட்ட மாங்கல்ய உறவும் உறவா?

இரவில் வரும் கட்டில் மிருகம்-காட்டு விலங்காய்
பெண்மையை வேட்டையாடி காமப்பசியாற்றிட
பகலில் கணவன் மனைவியாய் உறவாடி
நாடகம் ஆடிக் குழந்தைகள் ஈன்று தொடரும்
தாம்பத்திய வாழ்வும் ஒரு வாழ்வா?-

மஞ்சளும் குங்குமமும், மாங்கல்யமும் இதற்கேனோ?
பன்றிகளுக்கு முத்தும் பவழங்கள் எதற்கு?

காதலில் மலர்ந்த கவிதைகள் எல்லாம்
பொய்யாய்க், கனவாய்க், கற்பனைாய் மாறிட
கண்பார்த்து நெஞ்செழுதிய காதலும் கனவானது
மெய்யழகில் மயங்கி வாழ்வும் பொய்யானதே

வீணையெனும் பெண்மையில்
நாதம் இசைக்க தெரிந்த கலைஞனே ஆண்மகன்
ஏனையோர் அண்ணகனும் , அலிகளும்,
பாலியல் வல்லுறவுவாதிகளுமே!

மணக்கூண்டுக்குள் சிறைப்பட்ட-கானக்குயில்
மௌனராகம் இசைக்க-காம வேடனின்
தாலிக்கண்ணியில் சிக்கிய தோகை மயில் ஆடல் மறக்க-
மணமில்லாத மணவாழ்வுகள்?
விவாகரத்தாய் மாறிடும் உறவுகள்
விடுதலைப் பயணங்களே-இவர்ளும்
புதிய சுதந்திரப் பறவைகளே!

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-23-5-2023*

# ஆனந்தம்

---

தந்தையே என் இறைவா
உம்மை அறிந்து உணர்ந்தபின்
அறிவதற்கு வேறு உண்மையில்லை
ஆய்ந்து கற்றிட
ஆயகலைகளும் தேவையில்லை

சச்சிதானந்தமாய் உம்மை அறிந்தபின்
நெஞ்சிலே என்றும் ஆனந்த அமைதி
பெருவிருந்தாய் உம் பிரசன்னம்
திரு விருந்தாய் உம் திருவார்த்தை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-23-5-2023

# அன்னை சாரதாதேவி



புற்று நோயுற்ற மெய்-கந்தையாய் நொந்து பொய்த்திருக்க,
சுற்றமும், சொந்தமும் சோகத்தை பகிர்ந்து நெஞ்சு நொந்திருக்க,
வைத்தியம் கை விரித்த அவலம்
வாழ்வு நீர்க்குமி எனபதோ மாறாத நிதரிசனம்

பற்றறுத்த வாழ்வு பரப்பிரம்மத்தோடு கலந்திடக் காத்திருக்க,
உற்ற வாழ்வுத் துணைதான் சோகத்தால் உருக்குலைந்தழுதிட,
உத்தமியாள் உள்ளம் தேற்றிட பரமஹம்ஸ தேவர் மொழிந்தார்



"பதறாதே, அழாதே, மரணம் எனக்கல்ல,
வைத்தியர்கள் மொழிவதெல்லாம்
உடையாய் நிற்கும் வெற்று உடலுக்கே

எனக்கோ புற்றுநோய் இல்லை
மூப்பும், பிணியும், இறப்பும் உடல்களுக்கே,-
ஆத்மா எனக்கல்ல, ஆத்மா இறப்பதில்லை"
தன்னிலை அறிந்த மெய்ஞானி
மெய்யுரைத்தார் தர்ம பத்தினிக்கு

பரமஹம்ஸர் பரிநிர்வாண சமாதியடைந்த பின்
அன்னையோ கைமைக்கோலம் தவிர்த்து
கணவர் சொற்படி நடந்திட, ஊர் சொன்னது
"உன் கணவர் இறந்துவிட்டார் நீயோ கைம்பெண்

வெறுமையான உலகில்
நேர்வதாகத் தோன்றும்
மாற்றங்களை
நம் அறியாமையின்
காரணத்தால்-நாம்
அவற்றை உண்மை
என்கிறோம்.

உண்மையை தேடாதே
அபிப்பிராயங்களை
நிறுத்திக்கொள்

-ஸோஸென்-

கைவளையல்களை உடைத்து
பூவையும், பொட்டையும் களைந்து
வெண்ணாடை அணிந்து விதவைக்கோலம் பூணு
இதுவே நம் வைதீக மரபு".



புன்னகையோடு பதில் உரைத்த அன்னை
"ஊரை நம்புவதா? என் உத்தம புருஷரை நம்புவதா?
உடைகள்தான் மாறும்-மாறாத-ஆத்மனாய்த்
தன்னை அறிந்த மெய்ஞானியின் துணைவி நான்,
என் கணவரையே நம்புகிறேன்,
நான் அவரைத்தான் மணந்தேன்
மாறும் உடலை அல்ல."




உயிர் உள்ளவரை-பரமஹம்ஸ தேவரின்
பத்தினியாய் வாழ்ந்த உத்தமி
ஒவ்வோர் இரவும் படுக்கை விரித்து
பதியின் அறைவாயிலில் நின்று
கணவரை கனிவோடு அழைப்பார்

“பரமஹம்ஸ தேவரே
உறங்கும் நேரம் வந்துவிட்டது
உறங்கிட வாருங்கள் ”-

உணவு சமைத்தபின் கணவரின்
அறைவாயிலில் நின்று பதியை அழைப்பார்
-“பரமஹம்ஸ தேவரே
உணவு தயார், உண்ண வாருங்கள்”

மூலாதாரத்திற்கு
திரும்புவது-அதன்
அர்த்தத்தை
கண்டுபிடிப்பதாகும்.
ஆனால்
தோற்றங்களை
தொடர்வதென்பது
அதனை
நழுவவிடுவதாகும்

உள்ளுணர்வில்-மெய்ஞானியாய்
உத்தமி அறிந்த பேருண்மை-அகக் குருடர்
ஊரார் கண்களுக்குத் தெரியவில்லை-இது
உத்தம ஞானிகளுக்கே உரிய உயர் தன்மை

ஒருமுறை உன்னுள்ளிருக்கும்-நிச்சயமானதை
நீ அறிந்து கொண்டால்,
ஒரு முறை நீ இருப்பதை அறிந்து கொண்டால்
அந்த நிமிடத்திலிருந்து-உன்
பார்வைக்கோணம் மாறிவிடும்-ஓஷோ




இந்திய வரலாற்றில்-விதவைக்கோலம் பூணாத
விழிப்புற்ற பத்தினி-
ஆன்மீகத்தின் புரட்சிப் பெண்மணி
அன்னை சாரதாதேவி
கண்ணகியும், சீதையும் நம் கற்பனை
அன்னையோ மாறாத உண்மையின் ஒப்பனை



**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**(லோக சமஸ்தா சுகினா பவந்து)**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-23-5-2023

# ஆத்தி சூடி

---

தொழுது வாழு-படைப்பெல்லாம் இறைவன் சொத்தென்றே
காத்து, அன்பில் நிலைத்து வாழு
சூடேறும் பூமி மனம் குளிர சூழலைக் காத்து வாழு
ஓஸோன் படையின் காத்த, பட்ட காயத்தை ஆற்று

மாதா பிதா, குருவைத் துதித்து வாழு
நல்லோரை மதித்து வாழு, வஞ்சனை மறந்து வாழு
நிலையில்லா வாழ்வை-நினைந்தே
நிலை வாழ்வைத் தேடு

இரக்கம். கருணை நிறைந்து வாழு
இருப்பதை இல்லாதோரோடு மகிழ்வுடன் பகிர்ந்து
என்றும் விழிப்புடன் வாழு, ஞானத்தை தேடு

புறம் கூறல் தவிர்த்து பொய், களவு, பொல்லாங்கு
சூது, வாது, கள்ளுண்ணல் ஒழித்து
தருமத்தை மதித்து வாழு
பெண்மையைப் போற்றி-தாய்மையை வணங்கி
ஆணவமழித்து வாழு

தர்மமே தெய்வம் என்று அறிந்து வாழு
உன்னைப்போல்-அயலவரை அன்பு செய்து வாழு
மதம், நிறம், மொழி, இனம் சாதியம் கடந்து-
மனிதனாய் வாழு
மனிதர் உனக்கு என்ன செய்யவேண்டும்
என்று விரும்புவதை -மற்றோர்க்கு மகிழ்ந்து செய்து வாழு

தூய மனமே இறையில்லம்
சச்சித் ஆனந்தமே நம் இயல்பு என்று
அறிந்து வாழு ஆனந்த களிப்பில் வாழு

***நாமே தெய்வம்-அஹம் பிரம்ம அஸ்மி***

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-23-5-2023*

# ஆப்கான்

---

நாளும் பல விதவைகள், தினமும் புதிய அநாதைகள்
குருதி சிந்தி , குண்டு மழையில் தினம் நீராடும் தேசமிது.
தலிபானும், அல்கைதாவும், ஆப்கானை நரகாய் மாற்ற
கண்ணீர்த் தவமியற்றும் தாய்க்குலம்

வன்முறை இல்லாத நாட்கள் இல்லை
புதைகுழி முளைக்காத பொழுதும் இல்லை
பூக்களும் மலராமல் வாடி உதிர்ந்திட
புள்ளிக்குயில்களும் பாடமல் கரைந்தே அழுதிடும்

பண்ணும், பாடலும் மறந்து அழுகையும் ஒப்பாரியும்
ஓங்கி ஒலித்திட, காலனுக்கு நாளும் பூஜைகள்
பள்ளிகளும் பலிபீடமாய் மாறிட குண்டு வெடிப்புக்கள்.

கண்ணீரும், குருதியும் காணாமல் மறையாத பொழுது
தொழுதும், அழுதும், கடவுளை எட்டாத சத்தம்
ஒளியும், இருளும் நடத்தும் ஓயாத யுத்தம்
மண்ணைச் சிவப்பாக்கும் இரத்தம்

மழையும் மண்ணும் கலந்திட துளிர்க்கும் புற்கள்
உடலும், உயிரும் பிரிந்திட ஒலிக்கும் அழுகை ஒலிகள்
வான் அதிர, நிலம் நடுங்க தாக்குதல்கள்
வல்ல அல்லாவை எழுப்பிட
மௌனத்தை கலைக்கும் ஒப்பாரிகள்

அரை வயிற்றுக்காய் ஆடை களையும் விதவைகள்
கற்பைக் காக்க இயலாத அபாயாக்கள்
சுன்னத்து செய்தும் காமத்தை அடக்க முடியாத
ஆண்குறியின் விறைப்புக்கள்

குண்டும், குருதியும் நித்தம் உறவாடும் பொழுதுகள்
பூவும் வண்டும் சந்திக்காத விடியாத பொழுதுகள்.
***ஹே அல்லா!***

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-23-5-2023

# அலங்காரம்

---

***சாந்தி நிகேதன்- கொல்கொத்தா***
கவிதாகூரின் இல்லம்
அகிம்சையும்-கவிதையும்
சுதந்திர கீதமிசைத்த ஆனந்தப்பொழுது



உரையாடி மகிழ்ந்த நண்பர்கள் உலாவிடப் போவோம்
என்று எழுந்திட இதோ வந்துவிடுகின்றேன் -என்று
தம் அறைக்குச் சென்ற கவி-பல
நிமிடங்கள் கடந்தும் திரும்பாத ரவி

யன்னல் வழியே-காந்தி நோக்கிட, முடி திருத்தி,
தாடி மீசை வாரி-கவி தம்மை அலங்கரிக்க-
வேடிக்கையாக  நகைத்த மகாத்மா
“நாமோ வயது முதிர்ந்தவர்கள்
நமக்கெதற்கு அலங்காரம்” ?



அழகை ஆராதிப்பவன், அழகாயிருக்க ஆசிப்பவன்
நானோ அழகற்றவன், காண்பவர் மனம்
என் தோற்றத்தால் சிதைவதை காணச்சகிக்காதவன்
அதனால் இந்த அலங்காரம், கவிநயத்தோடு
பதிலுரைத்தார் கவி இரவீந்திரநாத் தாகூர்.

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-23-5-2023

# மகா அலெக்ஸாண்டர்

---

காலவெள்ளத்தில் கரைமோதி மடியும்-
கணக்கற்ற அலைகளில் தனித்த பேரலையாய்
மாவீரன் மகா அலெக்ஸான்டர்



இருபதில் அரியணை ஏறி- எண்ணற்ற அரசுகளை வீழ்த்தி
வாகை சூடி, பேரரசனாய் மகுடம் சூடி
வயது -முப்பத்தி இரண்டில்
மது நஞ்சாக மரணித்த அவலம்.

நடந்த வந்த பாதை எங்கும்
மண்டியிட்ட மகுடங்கள்- மரண ஓலங்கள்,
யுத்தப்பாதை எங்கும் இரத்வெள்ளம்-
உலகில் கிரேக்க கலை கலாச்சாரத்தின்
புது வெள்ளம்.

வாகை சூடிய மன்னவனால் வாழ்வை நீடிக்க முடியவில்லை
எதைக் கொண்டு எமனை வெல்வது
மந்திரிகளுக்கும், தளபதிகளுக்கும் புரியவில்லை

வெல்ல முடியாததை வெல்லாமல்-வெறுமனே
போரில் காலத்தை போக்கியது வேதனை தர
வெறுங் கையனாய்-வேந்தனும்
மரணத்தை வெல்ல முடியாமல் கலங்கி நின்றான்



நெருங்கிட்ட மரணம் -நெருப்பாய் ஒளிர்ந்து
அக இருள் அகற்றி "விழிப்பைத்" தர,
வாழ்வின் இரகசியம் புரிந்திட-பேரரசும், பெரும் புகழும்,
குபேர நிதியும் மரணத்தை வெல்லாது புரிந்திட
மாமன்னன் எழுதிய மரணசாசனம்-

மன்னன் ஆணைப்படி நடந்திட்ட மரண ஊர்வலம்
மரணத்தை வெல்ல மருத்துவர்களாலும்
முடியாது என்பதைக் காட்ட
பேழையைச் சுமந்த தலைசிறந்த வைத்தியர்கள்

மண்ணில் சம்பாதித்தவை
மண்ணிலே தங்கும் எனச் சொல்ல
வழியெங்கும் வாரியிறைத்த செல்வங்கள்

உடல் தாங்கிய பேழை வழியே, வெளித்தெரிந்த
வெற்றுக் கரங்கள், கொண்டு வந்ததும் ஏதுமில்லை,
கொண்டு போவதும் ஏதுமில்லை-நிதரிசனமானது

காலமே வாழ்வின் பெருஞ்செல்வம்-நம்
காலம் முடிந்திட காலமாகிப் போகின்றோம்
எல்லையுள்ள காலமே-எல்லையற்ற பெரும் செல்வம்



கோடி கோடியாய் செல்வத்தை தேடினாலும்
நம் ஆயுட் காலத்தை ஒரு கணமேனும் நீடிக்க முடியாது
வாழும் காலமே நம் வாழ்வு- இழந்த காலத்தை மீண்டும்
எதைக் கொடுத்தும் பெறமுடியாது.

முடிசார்ந்த மன்னரும் முடிவில்
பிடி சாம்பலாவது மாறாத உண்மை

மண்ணை வென்ற மாமன்னனால் மரணத்தை வெல்ல
முடியவில்லை, மரணவாசலில் கண்ட உண்மை
மன்னவர்க்கும், மனுக்குலத்திற்கும் மன்னவன்
மரண ஊவல்தால் சொல்லிய மகத்தான மேன்மை






மனதை வென்றவனே மன்னவன் என்றானது
மண்ணை வென்றவனும்
மண்ணாவன் என்றும் உண்மையானது.

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-23-5-2023*

# பிரசன்னம்

---

நாளெல்லாம் உழைத்து களைத்த கிராமம்
சுற்றம் கூட்டிக் கதைபேசி உண்டு, குடித்து மகிழ்ந்து
களைப்பாற உறங்கிடச் சென்ற இராக்காலம்

நிசப்தம் இசை மீட்க- இடையிடையே
"தொப்" "தொப்" எனக்
குளத்தில் துள்ளிப் பாயும் தவளைகளின் ஓசை



சில்வண்டுகளின் ஆலாபனை
இராப்பறவையின் பட பட வென சிறகடிப்பு
இயற்கையின் ஆனந்த இசைக்கோலம்

பசியும், தாகமும் மெய்வருத்த-பரிவோடு
சீதளத்தென்றல் தழுவிச் சீராட்ட
தளர்ந்த நடையோடு தள்ளாடி ஊர் வந்த துறவி
உறங்கிட்ட ஊர் கண்டு வாடிய மலராய்
உள்ளம் சோர்ந்து நின்ற பிறவி

தாழிட்ட மனை முன் தாழ்வாய்ப் பணிந்து
"தயை கூர்ந்து பெரியீர்-அடியேன்
ஏழைத் துறவிக்கு சிறிது உணவும், நீரும்
இராப்பொழுது உறங்கிட இடமும்
தந்தால் நலமாகும்" இரந்து நின்றார்

இரந்த வார்த்தை
ஆழ்ந்த உறக்கத்தை கலைக்கவில்லை,
ஏழைத் துறவிக்காய் மனமிரங்கி
எந்த இல்லக் கதவும் தாள் திறக்கவில்லை

ஒரு மனை மாறி மறு மனை நாடி அலைந்தவர்
வாடி நின்றார்-மன்றாடிக் களைத்தவர்
பசி மயக்கத்தால் உடல் சோர்ந்தார்

ஊர் உறங்கிய அழகிய இராக்காலம்-இருள் சூழ்ந்த
எழில் வானில் நட்சத்திரங்கள் கண்சிமிட்ட
உலா வரும் நிலவுக்கு வெண் கம்பள வரவேற்பு
பசி வருத்த இரந்த துறவிக்கு ஊராரின் கதவடைப்பு

கேட்டது கிடைக்காதபோதும்
எல்லாம் நன்மைக்கே என மனம் பூரித்த மனம்
ஊர் ஒதுங்கி ஓர் வெட்ட வெளியில் களைப்பாற அமர்ந்து
கடவுளை துதித்ததே கண்ணயர்ந்த துறவின் குணம்

நீரல்லி மலர்கள், நிலவுக்காய்த் தவமிருக்க
பசி அடங்கி உறக்கம் ஆட்கொள்ள
பால் நிலவு உலா வரும் அழகிய இராப்பொழுது.

நாழிகை பல கழிந்திட நல்லுறக்கம் கொண்டவர் முகத்தை
தண் ஒளி தழுவி விழித்திடு என்றழைத்திட-கண்மலர்ந்த துறவி
கண்ணுக்கு விருந்தாகும் காட்சியோ வற்றாத அழகின் அருவி

முழுநிலவின் பால் ஒளியில் முழுவுலகும் நீராட-
வெண் ஒளியின் பிரகாசம் பூவுலகை நிரப்பிட-வானில்
வாழ்த்திக் என்றே கண் சிமிட்டும் நட்சத்திரங்கள்
மண்ணில் கண்விழித்து-பார் என்றே
காற்றில் களி நடனம் புரியும் வண்ணமலர்கள்

பூங்கதவு தாள் திறக்க கண்விழிக்கும் மலர்களால்
மண்ணிலே புன்னகைக்கும் பூவனம்
விண்ணிலே கண் மயங்கும் ஒளி வெள்ளம்

பூவாசம் சுவாசத்தை நிறைக்க-வான்போடும்
வண்ணக் கோலத்தால், உயிர் மெய் ஒன்றாய்ச் சிலிர்க்க
இதயம் முழுவதும் இனம்புரியாத பேரின்பப் பரவசம்
பிரபஞ்ச பேரானந்தம், சச்சிதானந்தப் பேரமைதி

பொன்னொளி கீழ்வானில் வண்ணக்கோலமிட
மண்ணிலே மலர்களின் ஆராதனை
புள்ளினங்களின் பூபாள ஆலாபனை

பிரபஞ்ச இருப்பில் கரைந்திட்ட மனம்
பிரபஞ்சத்தோடு ஒன்றாகிக் களித்திட
ஆனந்த கூத்தாடும் நெஞ்சம்.

பொழுதும் பூவாய் மலர, உலகும் ஒளியால் நிறைய
மனமும் நன்றியால் நிரம்பித் தளும்ப
புள்ளினம் பாடும் பூபாளத்தோடு
இறை புகழ்பாடும் துறவியின் உள்ளம்

இந்த ஆனந்த அனுபவத்தைச் சுவைக்கவா-இறைவனும்
ஏழைக்காய் இல்லக் கதவுகளை தாளிட்டார்

கனிந்த உள்ளம் பணிந்து தொழ, கண்களும் பனித்து
நன்றி சொல்ல, நிறைந்த மனத்தோடு எழுந்தவர்
ஒவ்வோர் இல்ல வாசலிலும் நின்று நன்றியுரைத்தார்
"பெரியீர் தாங்கள் இரப்பொழுதை களிக்க-ஏழைக்கு
இடம் அளியாததற்கு நன்றி மிக்க நன்றி" என்றே

துறவியின் ஆனந்தம் ஊராருக்குப் புரியவில்லை
நன்றியின் அர்த்தமும் விளங்கவில்லை,
காணாத பேரின்பத்தை கண்ட துறவியின் உள்ளம்
குழந்தைபோல் குதூகலிக்க-நேரிய மனச்சான்று
நெஞ்சை குத்தி ஊராரைக் குற்றம் சொல்ல
வேதனையோடு மனம் வருந்திய ஊராரும்
ஐயனிடம், ஆசி வேண்டி நின்றார்

இராத் தங்கலுக்கும், உணவுக்கும் இல்லை என்றே கதவடைக்க
இடமில்லை என்றே கதவும் தாள் திறக்க மறுக்க
இறையடியார்க்கு இரங்கிட ஊராரும் மறுக்க-தன்
பிரிய அடியான் குரலைச் செவி மடுத்த ஆண்டவனோ
தம் இருப்பையே விருந்தாய் கொடுத்துப் பசி தணித்தார்.

விருந்தென்று மலர்ந்தே, வண்டுகளை விருந்தோம்பும் வண்ணமலர்கள்,
விருந்தையும் சுமையென்றே வாடி வெறுத்துக் கதவடைத்த ஊர் மனைகள்
விருந்துக்கும், பெருவிருந்தாய் தம் பிரசன்னத்தை பகிர்ந்திட்ட பிரபஞ்சம்

இருப்பதை பகிர ஊராரும் விரும்பவில்லை-இந்த ஊருக்கும்-
இறை பிரசன்னத்தை அறிந்திட எளிய உள்ளமில்லை,
இருப்பாய் நின்றவரோ இருப்பையே –விருந்தாய் படைத்து
இறையடியானை மகிழ்வித்தார்.

***எந்நாளும் எங்கும் இறை பிரசன்னம்***
***காணா விழிப்பில்லை, களிகூர வாய்ப்பில்லை***
***ஆணவம் தாளிட்ட மனம் ஆண்டவனை அறியாத குணம்***

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-21-05-2023*

# புல்லில் உறங்கும் பனித்துளிகள்

---

கனவாய்போன முதற் காதல்-கல்மலையில்
பதிந்த காலடித் தடமாய் இன்றும்-என் நெஞ்சில் .
விழிகளில் கங்கையும், இதயத்திலோ குருதியும் கசிய
பக்தனாய் படியேறி தொழுகிறேன்
இது இதயம் எழுதிய ஈரவிழிக்காவியம்.

காதல் அகழ்வாராய்ச்சியில்
இதயங்களை தோண்டிட--ஆறாத ரணங்கள்
ஓராயிரம் இரகசியங்கள்

இருப்பாய் நீ, எங்கும் நிறைந்த வெறுமையாய் நீ
உண்டும் இல்லையுமாய் நீ, உருவமும், அருவமுமாய் நீ
இருளும், ஒளியுமாய் நீ, எங்கும் நீ , எல்லாம் நீ
நானே நீ , அறிந்தால் ஆனந்தம் நீ

மறக்க நினைத்தேன்-முடியவில்லை
கனவிலும் நீ, நினைவிலும் நீ
மூச்சிலும் நீ, பேச்சிலும் நீ

காதல் பாவமென்றால், கடவுளும் பாவமே

காதல் இன்பத் தேனலைகள் பாயும்
இதயச்சங்கமம்

என் இதயவானில்
ஒரே ஒரு வெண்ணிலவு-அது நீதான்

என் காதல் அகராதியில்-ஒரே ஒரு சொல்
அதுவும் உன் ஒருத்தியின் பெயர் தான்

நிலவே ஒளிகொடு-உந்தன் காதல் வானம் நான்

இன்றும் என் இதயவாசலில் உன் காதல் கோலங்கள்
காலம் பல போன பின்பும் கலையவில்லை-
காதல் காயங்களும் ஆறவில்லை

வேல்விழிகளால் என் இதயத்தை உழுது
புன்னகைப் பூக்களால் நீ விதைத்த
காதல் செடி-நீரின்றிக் கருகுதடி

என் இதயத்துடிப்பும், சுவாசக்காற்றும் என்றும் நீதானடி

என் மூன்றாம் பிறைக்காதலும்
கண்ணே உன்னால், முழுநிலவானதடி

உன்னைக் கண்டு பூவாய் மலரும் விழிகள், புள்ளி மானாய்த்
துள்ளும் இதயம், நாணிச்சிவக்கும் ஆனிப்பொன்மேனி
காதல் விருந்து நானடா- உண்டு காதல் பசியாறடா
என் கண்ணாளா, அழைக்கும் அவள் விழிகள்
பாலும், தேனுமாய் அவள் மொழிகள்

உன் இதயக் கதவை நீ மூடிவைத்தாலும்-கண் வழியே
உன் இதயக்கதவை தட்டும் என் காதல்

காதலே உனதன் விழிச்சுடரில்
விளையாடி மடியும் விட்டிலாய் நானடி
என்னைத் தீய்க்காதே

இறைவன் போதையில் உலகை படைத்தானா?
மதுவிலும் போதை, மாதரிலும் போதை?

காதல் எனக்கு பருவம் தவறிய தேன் மழை

ஏழு ஸ்வரங்களை மீட்டும் என் இதயவீணையில்
எட்டாத காதல் ஸ்வரமாய் எனை வருத்தும்
காதல் சுரமுமாய் நீயடி

அழகைக் கண்டு விழிகள் மயங்க
மொழிகள் கேட்டு செவிகள் கிறங்க
மானாய்த் துள்ளிய இதயம்-காதலை
சொல்லி மகிழ்ந்தது

தொலைவில் நின்றேன்-தென்றலில் வாசத் தூது விட்டாய்
அருகில் வந்தேன் வண்ணங்கள் மலர
கன்னங்கள் சிவக்க மலர்ந்து புன்னகைத்தாய்
வாடிய நெஞ்சின் விடாய் தணிக்க
வாரி அமுதை தந்தாய்-பூவே நீ வாழி!

உன் நிழலாய் வந்தும்-என் நெஞ்சை நீ அறியவில்லை
ஒரு மலராய் பூத்தும் மாதே நீ சூடவில்லை
துளையும். துவாரமும் கொண்ட
வெற்றுகுழலில்-தென்றலின் கீதம் கேட்கின்றது

வாழ்வே கடவள்-வாழத்தெரிந்தவனே ஆஸ்திகன்

மதம் பிடித்த யானையும் குணமாகிக் கூட்டத்தை சேர்ந்தது
மதம் பிடித்த பக்தகூட்டமோ மானுடத்தை பிளவுபடுத்திப் போராடுது

பசுக்களைத் தொடர்ந்தேன் புல்வெளியை காட்டின
தேனீக்களைத் தொடர்ந்தேன் பூவனத்தை காட்டின
காதலாகி, உன்னைத் தொடர்ந்தேன்-ஏனடி
கண்ணீரை காட்டினாய்-

செடிகளின் புன்னகைதான் மலர்களோ?

கண்ணுக்குத் தெரியாத வேர்களின் கடும் உழைப்பை
பூக்களின் புன்னகை சொல்லுது.

உன்னை கண்டு வைரமாய் ஜொலித்து
வானவில்லாய் மாறும் என் இதயம்

மதுவால் நினைவை இழந்தவர்களொ மதுப்பிரியர்
மாதர் காதல் போதையில் வாழ்வையே இழந்தவர்களோ
மஜ்னு-தேவதாஸீக்கள்

உன் முத்தத்தால் - என் மொழிகளிலும் தேன் கவிதை

உலாவரும் நிலவுக்கு- வெண்மேகம் வெண்ணாடை விரிக்க
நட்சத்திர பூக்கள் தூவி வரவேற்கிறது இரவு

உன்னைக் காணும் வரைக்கும் இதயத்தின் வெறுமை-ஏனோ
எனக்குத் தெரியவில்லை

தவமிருந்து பெற்றால் வரம்-இரந்து பெற்றால் தானம்
தானாகக் கிடைத்தால் அருள்-காதலே நீ எந்த ரகம்?

காதல் இதயங்களைப் பகிர்ந்திட
மானிடர்க்கு கொடுக்கப்பட்ட இதயக்கனி

மழையால் செழித்த மண்
மனித உழைப்பால் பொன்னானது-பின்
போரால் புண்ணாகுது.

வசந்தமாய் வந்தவளே-என்னை
வாட்டும் கோடையுமானாள்

பயிற்சியின்றி வலைபின்னும் சிலந்தி
பாதையில்லா வானில்-வரைபடமின்றி
பறக்கும் பறவைகள்
கட்டிட கலைக்கு சவால் விடுக்கும்
கறையான் புற்று, தூக்கணாம் குருவிக்கூடு

சொட்டுச் சொட்டாய் அமுதெடுத்து
கடின உழைப்பால் கட்டிய
ஒற்றுமையின் சின்னமாய் தேன்கூடு

கிளியின் மொழி, குயிலின் பாட்டு, மயிலின் நடனம்
எங்கும் இயற்கையின் இரகசியங்கள்
பிரமிக்கவைக்கும் ஆச்சரியங்கள்

சுற்றிச் சுற்றி சற்றும் களைக்காமல்-
நீள்வட்டப்பாதையில் எங்கே பயணிக்கின்றன
இந்த கோள்களும், கிரகங்களும்

பறவைகளின் சுப்பிரபாதம், சேவலின் கொக்கரக்கோ
பூக்களின் வண்ணக்கோலம்
சூரியனுக்கு என்னே வரவேற்பு

கவிதையும், கண்ணீரும் தரும் இன்பப்போதை -காதல்,
காதல் தரும் போதையாய் மாதர்

தன்னை எரித்து உலகை ஒளிர்விக்கும் சூரியன்
பெற்ற ஒளியை கொடுத்து, வளர்ந்து தேயும் நிலவு
கொத்திப் பிளந்தாலும் பலன் கொடுக்கும் பூமி
மண்ணைச் செழிப்பாக்கி- தன்னை கொடுக்க
கடல் நோக்கி ஓடும் கங்கை, தாலாட்டும் தென்றல்
நிலவால் ஒளிரும் இரவு வானம்
எங்கும் தாய்மையின் தோற்றம்
இயற்கையின் இரகசிய-ஆச்சரியங்கள்

கார்மேக கூந்தலில் மலர்சூடி, கயல் விழிகளில் மையெழுதி
சுருதி சேர்கிறது-கன்னியின் காதல் மனம்

ஒளியில் கண்மலர்ந்த பூக்கள்
இருளில் தூங்கபோகின்றன
உண்மையும், அன்பும் அழியாச் செல்வங்கள்
மெய்யறிவே ஞானம்-செல்லா காசு சொத்தாக
திசைமாறிய தேடலில் மானுடம்.

வாசம் பூசி, மகரந்தம் சூடி
ஆனந்தபோதையில் ரீங்காரம் பாடிட
காதலனை, வழியனுப்புகிறது வண்ணமலர்

வாழ்க்கை ஒரு நதி,
நீந்த தெரிந்தவர் மூழ்கினார்
நதியோடு போனவர் கரை சேர்ந்தார்.

இருளை அறியாத சூரியன்-
இரவு வானில் உலாவரும் அழகு நிலாவை
இன்னமும் காணவில்லை
நிலவின் காதலை அறியவில்லை

ஒவ்வொரு நாளும் புதிதாய் வாழ்
சேதி சொல்லி மலரும் பூக்கள்

கார்மேக கூந்தல் மழையாய் கரைய
பெருமூச்சு காற்றாய் அலைய
ஒளிரும் நகைகள் மின்னலாய் உதிர
இடியாய் குமுறி அழுது துறவு பூணும் வானம்

என்னை கேட்காமல் துடிக்கும் இதயம்
உலவும் சுவாசம், திறந்து மூடும் இமைகள்
அலையும் மனம்- இன்றோ -என்னை
அலைக்கழிக்கும் காதல்

தோற்ற காதலால் -விழிகளில் கங்கை பாய
காற்றாய் இருந்த இதயம்- இமயமாய்க் கனக்கிறது.

இன்றும் என் இதயத்தில் முதல் காதலின் சிதைவுகள்

என் முகவரியில் நானில்லை, முகநூலும் எனக்கில்லை
நானிருப்பதெல்லாம் உன் இதயத்தில் மட்டுமே

என் இதயம் மலராத என்முதல் காதலை-ஏனோ
இன்னும் அடைகாக்கின்றது.

புல்லில் உறங்கும் பனித்துளியிலும் வானவில்லின்
கலைக்கோலம், மரணம் என்னைப் புதைக்கவில்லை
விதைகின்றது- மீண்டும் முளைப்பதற்கு

காதல் சொல்லிடும்-என் இதயக் கண்ணாடியை
“சொல்” எறிந்து உடைக்காதே
இது எளிதில் நொருங்கும் இதயமடி

ஒருவனுக்கு ஒருத்தி என்று உணர்த்திட
அதாம் , ஏவாளை மட்டும் ஆதியில்
இறைவன் படைத்தானோ?

என் இதயக்கதவு தாழிடப்படவில்லை
தட்டியவர் யாருமில்லை-மூடி தூங்கப்போனேன்
காதலர் பலர் தட்டியும்-என் தூக்கம் கலையவில்லை

மறையும்போதும்-ஒளியை நிலவுக்கு வழங்கி-
பூமியை ஒளிரச்செய்யும் சூரியன்
உண்மையில் வள்ளல்தான்.

காதல் சொல்லி கண்களால் என்னைச் சிறையெடுத்தாய்
இன்றோ கண்ணீர் கடலில் என் விழிகள்
சோகச்சிறையில் என் இதயம்.

என் காதல் கவிதைகளைப் பட்டமாக்கிப் பறக்கவிட்டேன்
நூலறுந்த காற்றாடியாய் அலைந்தன.
காகிதக் கப்பல் செய்து மிதக்கவிட்டேன்
கண்ணீரில் மூழ்கிப்போயின.

காதல் -இதயம் எடுத்த புகைப்படமா, ஒளிப்படமா
கண்ணே- நீ

என் கலைந்த கனவுகளில்-காதல் வண்ணமிழந்த ஓவியம்

தேவைகளுக்காய்-தேவனே
உன்னைத் தேடுவேனாகில் நான் ஏழை
உன் அன்பிற்காய் ஏங்குவேனாகில்
அப்பா நான் உன் பிள்ளை

சொல்லமறந்த காதலும் -ஊமை
வெல்லத்தின் சுவையாய்போனது

என் இதயம் கண்ட முதல் உதயம்-உன் பூமுகம்

கானக வாழ்வு கசந்திட-இராவணன்
காதலை நினைந்துருகும்-சீதை

பொன்னும் நகையும் இழந்திட, விவாகரத்து
கோரும் கண்ணகி, மாதவியின் சிலம்பை திருடி
புது நாயகி தேடும் கோவலன்

மணாளர் ஐவரிருந்தும் மானம் காக்காத பேடிகளை
கானகத்தில் கைவிட்ட புதிய பாஞ்சாலி

கண்ணீர் வெள்ளத்தில் மூழ்கி
பெருமூச்சின் வெப்பத்தில் தீயும் காதல் இதயம்.

மரித்த காதல் உயிர்ப்பதில்லை
உண்மைக் காதலுக்கு மரணமில்லை

நீரில் பிரதிபலிக்கும் -நிலவின்
பிம்பங்களாய் என் மனதில் காதல்

கல்லான பனிக்கட்டி நெகிழ்ந்திட நீராய் மாறும்
வானெழுந்து காற்றில் உலாவும் மேகம்
வையகம் செழிக்க பெய்யும் மழை
நீரின் பல தோற்றங்கள்
அகங்காரம் கலைந்த அழகு நிலை

மயக்கிட்ட காதல் கன்னியே
மனம் கலங்கிட கண்ணியானது.

மின்னல் இடை கண்களை பறிக்க
கண்களே கன்னக்கோலாகி
இதயத்தை பிளக்க-இதயத்திருடி
என் இதயத்தை கொள்ளையிட்டாள்

உன்னைக் காண- இமைகளே திரையானது
உன்னை எண்ணிட- எண்ணங்களோ சுகமானது
உன்னைச் சுமந்து- இதயமோ காற்றானது
இன்றோ-காதலும் கனவாயிட, இதயமும்
காயமாகிட-நெஞ்சில் இமயமாயச் சோகங்கள்

முள்ளும் மலரும்தான் காதலோ?

விழிகளால் காதல் தூண்டில் போடுகிறாள்
கயல்விழியாள்

கண்களால் என் இதயத்தை கொத்தும்
காதல் மரங்கொத்தி-நீதானா

புன்னகையால் கண்ணீரை வாங்கும் விளையாட்டு காதல்

காதல் பயணத்தில்-என்னைத் தொலைத்த பயணி நான்

நிழல்-சொல்கிறது வாழ்க்கை நிரந்தரமல்ல

மண்ணிலிருந்து மண்ணுக்கு பயணிக்கும் வாழ்வு-மனிதம்

உன் காதல் தீயில் மடிந்த என் இதயத்தை
கண்ணீர்க் கங்கையில் கரைகின்றது நினைவு

காதல் பாதையில் கன்னியரின் சமிக்ஞ்சை விளக்கோ
நாணம், புன்னகை, கண்ணீர்

கண்கள் கலக்க, இதயம் துடிக்க மலர்ந்த காதல்
நெஞ்சில் தேனாய் இனிக்கிறது.

வானம்பாடியாய் பறந்தேன்-ஏனடி
காதல் கூண்டுக்குள் சிறைவைத்தாய்.

என் கண்ணீர்க் குளத்தில் காதல் தாமரை

காதல் வேள்வியில்-ஆகுதியாய் என் இதயம்

என்னை மறந்த காதலுக்கு
நான் எழுதும் கவிதைகள் எல்லாம்
இதயம் பாடிய முகாரிகளே

எனக்காய் என்றுமே நீ உன்னை அலங்கரித்துக் கொண்டதில்லை
உன் இதய அழகைக் காண என் விழிகளோ எந்த தவமும் செய்யவில்லை
பாதை மாறிய பயணத்தில் இருவரும் தோற்றுப்போனோம்.

காதல் வயலில் கண்ணீர் அறுவடை

மதக்குருடர் கைகளில் உலகம் எங்கும் இருட்டு
இறைவனைக் காணவில்லை

நான் இறந்தால் அழ யாருமில்லை
இறப்பு உண்மையில் ஆனந்த களிப்பு

காதல் அபாயம் எனக்கென்றா
அபாயாவால் உன்னை மூடிக்கொண்டாய்?
மையெழுதிய உன் விழிகள் தழுவி
என் விழிகளும் காதலை விதைக்க, நெஞ்சம் தவிக்க
இதயத்திற்கும்-காதல் சிறகடிக்கும்
எண்ணத்திற்கும மூடிட ஏதடி அபாயா?

ஈரவிழிகளையும், இமயச்சோகத்தையும் தந்துவிட்டு
என் காதல் கிளி பறந்துபோனது.

தாய்மை உள்ளவரை தெய்வம் வாழும்

மண்ணால் மனிதனை இறைவன் படைத்திட-
கல்லாய் இறைவனை மனிதன் வழிபட
மண்ணும், கல்லும் கலந்த மாறா உறவோ மதம்?

உண்டு, குடித்து, உறங்கி எழுந்து
உழைத்து பொருள் சேர்த்து
உறவு கொண்டு சந்ததி பெருக்கி மடிந்துபோகும்
மாறாத வரைவிலக்கணமாய் வாழ்வு?

தன்னை அறியாத விலங்காய் மனிதன்
தன்னை அறிந்தவரோ
புத்தராய், இயேசுவாய், கிருஷ்ணனாய்
பரிணமித்த அவதார நிலைகள்

அன்புக் கடவுளுக்கு ஏன் படையும் போராயுதங்களும்?
வரமாய் கொடுத்த ஆயுதங்கள், வற்றாத நதியாய் ஓடும் குருதி
ஓயாத மதவாத, இனவாத யுத்தங்கள்
மனம் நோகுது.-மதம் சாகுது

புராணங்களிலும் புளித்த காமம்
ஞானி சாலமோனக்கும், கிருஷ்ணனுக்கும் ஆயிரமாயிரம் மனைவியர்
பலதாரநபிகளுக்கு சிறுமியும் ஒரு தாரம்-புரியவில்லை

இறைநிலை நமக்குள்ளே, நாமே நமக்கு ஒளி
மண்ணை துளைத்து செல்லும் ஆணிவேர்
பள்ளம் விழுந்து கடலைத்தேடும் நதி
உயரப்படர்ந்து ஒளியை தேடும் கொடி

இருளும் ஒளியுமாய் உலகம்
ஆணும் பெண்ணுமாய் மனிதம்
இருமை கடந்ததாய் இறைவன்

பாதைகளில்லா வானில் பறக்கும் பறவைகள்
தம்முள் மோதிக்கொண்டதில்லை
செய்தியில் நாளும்  வீதி விபத்துக்கள்

விலங்குகள் யுத்தம் புரிவதில்லை
வீணாய் இரத்தம் சிந்துவதில்லை-இன்றும்
யுத்தம் புரிந்து ,இரத்தம் சிந்தும்
மதவாத, இனவாத விலங்குகள்

ஷீயா, சுன்னி யுத்தங்களால் முனமுடைந்த அல்லா
யூத, பாலஸ்தீனிய மோதல்களால் கண்ணீர சிந்தும் யாவே
-றொகின்ஜா, தமிழ் அகதிகளோடு-அகதியாய்
அமைதிதேடி அலையும் புத்தர் பெருமான்
என் தேவனே என் தேவனே
ஏன் என்னை கைநெகிழ்ந்தீர்-என
இன்றும் சிலுவையில் கதறிடும் இயேசு

இந்து முஸ்லீம் கலவரங்களால்
துன்புறும் மசூதியிலும் , இராமர் கோயிலிலும்
அஞ்சி ஒளிந்திட்ட ராம் ரகிம்.

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-21-05-2023*

# புதிய காதல்

---

என்னை மறந்தாயா அன்பே? நாம் பிரிந்தபின்
என்னை நினைத்தாயா? மூன்று வருட விவாகரத்தின் பின்
கணவனைச் சந்தித்தவள் கண்கலங்கி நெஞ்சம் நெகிழ
இதயம் மாறாத காதலைச் சொல்லக் மெல்லக் கேட்டாள்.

என் நினைவே நீ தானடி, நீ போனபின் நிம்மதியும் போனதடி
என் நினைவே எனக்கில்லை எந்நாளும் உன் கனவே கண்ணே
நடைப்பிண வாழ்வு சுமையானதடி, இதயம் கூனிக் கனக்குதடி

நெருங்கி வந்தவள் நேசத்தோடு அவனை உரசிட
ஆசையாய்க் கரம் பற்றி நேசமாய் அவள் நெற்றியை வருட,
கன்னம் சிவக்க, கண்களில் நீர் ததும்ப-அவன்
நெஞ்சினில் சாய்ந்த பூங்கோதை

விம்மிய நெஞ்சம் விழி நீர் சுரக்க பாசத்தோடு வினவினாள்
இரவு உணவுக்கு என்ன கொண்டு வர?
என்னைக் கொண்டு வரவா?

பரிவோடு கூந்தலைக் கோதியவன்-நீ மட்டும் போதும்
என் பசி தீரும் காதலோடு மொழிந்தவனை
கண்ணீர் மல்கிட நோக்கியவள் விம்மி அழுதாள்

கண்ணீர் துடைத்தவன் காதலோடு அணைக்க
நிம்மதி நெஞ்சை நிறைக்க, நம் உறவு ஏனடி பொய்யானது?
நாம் கண்ட கனவு ஏனடி பகல் நிலவானது?

மண்ணோடு கலந்திட்ட மழை நீராய்
உயிரோடு, மெய் கலந்த முத்தமிழாய்
பூத்த நம் உறவும் பொய்யானதே

புரிந்துணர்வும், விட்டுக்கொடுப்புமின்றி-ஆணவம்
எம்மை ஆட்டிப்படைக்க
வேரறுந்த செடியாய், நூலறுந்த பட்டமாய்
நீரிழந்த பயிராய் நெஞ்சம் வாடி நிம்மதி இழந்தோம்

***முதல் முறை நாம் சந்தித்தபோது***
கதிர் கண்ட செங்கமலமாய் கண்கள் மலர
செம்மாங்கனியாய் உன் கன்னங்கள் சிவக்க
கார்மேகம் கண்ட தோகையாய் இதயங்கள் துள்ளியதே

விழிகளும் விழிகளைத் தழுவி வியந்து காதல் கொள்ள
மொழிகள் கவிதை சொல்ல, காதல் மலர்ந்ததே
மண்ணும், மழையுமாய் நெஞ்சங்கள் கலந்திட
இருமனம் ஒரு மனமாகிக் கல்யாணம் பண்ணிடத் துடித்ததே

கல்யாணமும் திருவிழாவாய் நடந்தேற-காதலாகி
இணைந்த இதயங்கள்-பாடிக்களித்த வானம் பாடிகள்.

ஆசை கழித்து, மோகம் மறைய ஆனந்தத் திருமணமும்
அவசரமாய் எடுத்த முடிபோ என மனம் களைக்க
மூன்று முடிச்சும் தூக்கு கயிறோ என மனம் நினைக்க
மாங்கல்ய வரம் கேட்டவளே மணச் சுதந்திரம் கேட்டாள்

தாலி துறந்து, வேலி இல்லாப் பயிராய் வடிவிழந்து
மஞ்சளும், குங்குமமும் கலைத்த மங்கை
தந்தவன் கைகளில் தாலி கொடுத்து-தாரமே
புது அவதாரம் எடுத்த நங்கை

காதலில்லா மணவாழ்வு -கொடிய நரகானது
மனம் கசந்த மண உறவு சிறையானது

“மாங்கல்யம் தந்து நானே” மந்திரமும் பொய்யாக
தாலியை கழற்றித் தந்து போனவளை
காதல் சுகம் தந்த தேவதையைக் காலங்கள் கழிந்திட
காதலனாய், கணவனாய் வாழ்ந்தவன் கண்ட நேரமது

காலம் கனிந்திட, கலங்கிய மனம் தெளிவுற
கனத்த இதயங்கள் காற்றாய் மாறிட
முடிந்த கதையில் புதிய தொடக்கம்
உடைந்த உறவிலே புது இணக்கம்

அன்பைத்தவிர வேறு ஏது இனிது இந்த உலகில்
அன்பை பகிரும் இல்லறம்-மானிடர்க்கு
இறைவன் தந்த நல்லறம்

புரிந்த உள்ளங்கள் மீண்டும் இணைந்த திருநாள்.
ஒற்றைக் குயிலாய் கரைந்த மனங்கள்
சோடிக் குயில்களாய் மாறிய புனித நாள்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-21-05-2023*

# சமதர்ம சமன்பாடுகள்

---

சாதி, மத இனக் கொடுமைகள் நீங்கச்
சமதர்மச் சமன்பாடுகள் இல்லை
காவிரி, முல்லை பெரியார், நீர் பிரச்சினைகள் தீர்க்க
ஐயா அப்துல் கலாமிடம் கனவுகள் இல்லை

கடல் நீரை நன்னீராக்கிட, கடல் பாயும் நதிகளை ஒன்றினைத்து
காயும் பூமிகளை ஈரமாக்கிடச் சோதனைகள் இல்லை
இந்திய பாகிஸ்தானிய பிரச்சனைக்கு தீர்வுகாண
அமைதித் தேற்றங்கள் இல்லை.

வறுமை ஒழிந்து, வாழ்வாதாரம் மலரப்
புதிய வாய்பாடுகள் இல்லை, மூட நம்பிக்கைகள் ஒழிந்து
பகுத்தறிவு சிந்தனைகள் மலரச் சூத்திரங்கள் இல்லை

பௌத்தமும், சமணமும் காட்டிய அஹிம்சையும்
காந்தியின் சாத்வீக கனவும் நனவாகிட
அரசியல் வாதிகளிடமும், அணு விஞ்ஞானிகளிடமும்
கனவுகளில்லை, கற்பனைகளில்லை

எல்லையிலே சீறிடும்- சீன, பாகிஸ்தானிய
ஏவுகணைகளும், அணுவாயுதங்களும்
இருண்ட கனவுகளால் வந்த தீராத தொல்லை?

வெள்ளைப்பறாவும் அஞ்சிப்பறந்திட
கொள்ளை நோயாய் பயங்கரவாதம் பரவிட
அணுவாயதமே தடுப்பு ஊசி மருந்தாய் மாறிட
ஐயா அப்துல் கலாம் சலாம் சொல்ல மறந்து
தூங்கிட்ட நிலைஅவல நிலை
உலக சமாதானமோ-இன்றும்
பகல் கனவான நிலை

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-21-05-2023*

# சத்யகிரகி

---

உண்ணா நோன்பும், பிரார்த்தனையும் கொண்டு
ஒன்றுபட்ட இந்திய சுதந்திரத்திற்காய்-
இந்து முஸ்லீம் ஒற்றுமைக்காய்
அகிம்சை வழியில் போராடிய அண்ணல்

அண்ணலின் மனம் புண்பட- நாடு இரண்டாய்ப் பிளவுபட
நள்ளிரவில் மலர்ந்திட்ட சுதந்திரம்
நாடெங்கும் கட்டவிழ்ந்த இந்து முஸ்லீம் கலவரம்

நாமமும், நீறும் தரித்து, கீதையும், இராமாயணமும் ஓதியவரும்
அல் குரான் ஓதி, ஐவேளை அல்லாவைத் தொழுதவரும்
சிந்திய இரத்தத்தால் சிவந்த சுதந்திர பூமி
கற்பழிப்பு, கொள்ளை. தீ வைப்புகளால் நாறி
சாயம் வெளுத்த போலி மதவாதச் சாமி

ஆன்மீகச் சுதந்திரமில்லா மானுடத்திற்கு-
அரசியல் சுதந்திரம், ஆணவத்திற்கு போட்ட தீனியானதோ?
அடிமைகளாய் வாழ்ந்த இனத்திற்கு சுதந்திரம்
அறியாத கீதையானதே

வெள்ளையர் காத்த மகாத்மாவின் உயிரை
இந்து மதவெறியர் சுட்டுப் பறித்திட-இந்திய சுதந்திரம்
இன்றும் எல்லைகளில் இரத்தம் சிந்திட,
அணுவாயுதங்களும், ஏவுகணைகளும், பயங்கரவாதமும்
அனைவரையும் அச்சுறுத்தும் அரக்கராய் மாறியதே

கற்சிலையாய் மாறிட்ட காந்தியும்,
புத்தர் பெருமானும் கண்ணீர் சிந்திட
நாம் எங்கே போகின்றோம்?

வெள்ளையர் அடிமைத்தனத்தில்-மதம் கடந்து
ஒரு தாய் மண்ணின் மைந்தரென்ற உறவு கொண்டு
ஒன்றுபட்ட இந்து முஸ்லீம் சகோதரத்துவம்
சுதந்திரம் வந்த பின் நலிந்ததென்ன?
பாரத மாதாவும் மனம் உடைந்து போனதென்ன?

ஒன்றாய் போராடிப் பெற்ற சுதந்திரம், மதவாதத்தால்
இரண்டாய் பிளவுபட்டு பிரிவினை வளர்த்திட
நாளும் எல்லைகளை அச்சுறுத்தி இரத்தம் சிந்திட
ஓ மகாத்மா நாம் எங்கே போகின்றோம்.

"உண்மையின் சுதந்திரம்" நமக்குக் கிடைக்காதவரை
நாம் தேடிப் பெறாதவரை,
அமைதியின் ஆனந்தம் நமக்கில்லை.
வன்முறை பாதையில் என்றுமே அமைதியில்லை.

மகாத்மாவின் கைத்தடியும், கைராட்டினமும்,
சத்திய கிரகமும் அரசியல்வாதிகளுக்கு அச்சமூட்டிட
அனுவாயுதங்களும், ஏவுகணைகளும் எல்லைகளை அச்சுறுத்திட
அமைதிப்புறா எங்கோ பறந்துபோனது

அகிம்சை மறந்த இனம் இன்று-பேரழிவு
ஆயுதங்களை நாடுது.-மகாத்மா
என்றோ வாழ்ந்த மாமனிதன் கதையாய்
சிலையாய், படமாய், சித்திரமாய் ஆனது

மகாத்மா மறைந்தாலும், மறையாத ஹிட்லர் இனம்
இடிபட்ட பாபர் மசூதியும், எழுப்பிடும் இராமர் கோயிலும்
அன்பே சிவத்திற்கு அறை கூவலாக தொடரும் மதவாதம் யுகம்
உலக அமைதியும், ஒற்றுமையும் பகல் கனவானதே நிஜம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-21-05-2023*

# சேவல் கூவுது

---

கிழக்கை விளித்து, தலையை உயர்த்தி
செங்கொண்டை மணிமுடி சிலும்பிட
இறக்கைகளை விரித்து
படபடவென்றடித்து உற்சாகத்தோடு
“கொக்கராக்கோ”
என்று உரக்க கூவியது-செஞ்சேவல்
விடியல் கண்ட வியப்பை சொல்லி
விழித்தெழு மானுடா என்றழைக்கின்றது
செஞ்சேவல்.

கதிரவன் வருகைக்கு கட்டியம் கூறி
கண்ணயர்ந்த புள்ளினங்களை
கண்விழிக்க அழைக்கின்றது செஞ்சேவல்.

தன்னுள் விழித்தரோ
விடியல் கண்டார்-மற்றவரோ-
மறுபடியும் பிறந்திட-கருப்பை குழியில்
மீண்டும் விழுந்தார்.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-22-05-2023

# சொர்க்கம்

---

“அன்னை இல்லத்தின்” வாயிலில்-தொங்கிடும்
அழகான மணித்தொட்டில்
அருகே அழைப்பு மணிக்கயிறு

அநாதரவான அன்னைகள்-தம் கைக்குழந்தைகளை
தொட்டிலில் இட்டு மணிக்கயிறை அடிக்க-குழந்தைகளுக்கு
அன்னையும் பிதாவுமாய் மாறிடும்
அன்புருவான குருவானவர் சூசை

வயதோ எழுபது வாழ்நாளில் பல நூறு குழந்தைகளுக்கு
தாயும் தந்தையுமாகி வாழ்வளித்த தந்தை
குன்றாத பக்தியோடும், மறவாத நன்றியோடும்
இறைவனைப் போற்றி வேண்டி நின்ற நேரம்

தந்தையே வாழ்ந்த காலம் போதும், வீடு வர உள்ளம் வாஞ்சிக்கின்றது
உம்மை காண மனம் ஆசிக்கின்றது என் சொந்தமே என்னை அழைப்பாயா?
செபம் முடியுமுன் மணி ஒலிக்க வருகிறேன் தந்தையே மனமுரைக்க
விரைந்து வாயிலுக்கு வந்த அருட் தந்தை

மணித்தொட்டில் ஆட-மணிவயிற ஈன்ற மழலைச் செல்வம்
ஆழ்ந்து கண்ணுறங்க, அருகில் யாருமில்லை
சுற்றும் முற்றும் பார்த்தவர் சொர்க்கம் கண்ட மகிழ்வோடு
அள்ளித்தூக்கி அணைத்துக் கொஞ்சி
குழந்தையை ஆலயம் கொண்டு வந்தார்

அப்பா, தந்தாய் இன்னும் என் பணி முடியவில்லை
பலம் கொடுங்கள், பாலகன் வளர்ந்து பெரியவனாகும் வரை
வாழ்வு கொடுங்கள் கெஞ்சியவர் தம் பணிதொடர்ந்தார்

ஆண்டுகள் இருபது போனபின் ஆலயத்துள்ளே
வெண்தாடி மார்பைத் தொட வெளுத்துத் தளர்ந்த மேனி
ஊன்று கோல் கொண்டு நடக்க
இறைவனை வேண்டி நின்றார்

அப்பா, தந்தாய் நீ தந்த வாழ்வுக்கு நன்றி
உம் இல்லம் வர ஆசிக்கின்றேன்
உம்மோடு வாழ வாஞ்சிக்கின்றேன்

வாஞ்சையோடு இறை குரல் ஒலித்தது

“என் மகனே இத்தனை காலம் -நீ
எங்கிருந்தாய் என எண்ணுகின்றாய்
நீ இருந்த இடமே சொர்க்கம்

கைவிடப்பட்ட குழந்தைகளுக்கு
அம்மை அப்பனாய் வாழ்வை அர்ப்பணித்த
உன் இதயமே சொர்க்கம்
நானும் அங்குதானிருக்கின்றேன்”

ஆனந்தம் நெஞ்சில் நிறைய
அமைதியில் ஆழ்ந்து உறங்கிய
அன்புத் தந்தை.

அன்புத் தந்தையின் ஆழ்ந்த உறக்கம் சொல்ல
ஆலயமணிகள் ஒலித்திட்ட ஆண்டவன் ஓடி வந்தார்
சொர்க்க வாயிலில் குழந்தை ஒன்று

சொக்கியே அள்ளி அணைத்த இறைவன்
வீடு வந்தாய் மகனே-இனி
உன் அம்மை அப்பன் நான்தான் என்று

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-22-05-2023*

# சிரியாவைச் சீரழித்த யுத்தம்

---

குண்டு துளைத்த உடல்களும், குண்டு வீச்சால் சாய்ந்த உறவுகளும்
கொத்து கொத்தாய், உதிரிகளாய் இங்குமங்கும் சிதறிக் கிடந்திட
வானில் பிணந்தின்னிக் கழுகளை விரட்டியடித்து
உயிர் தேடும் குண்டு வீச்சு விமானங்கள்

குண்டுகள் சாய்த்த மனைகள் எரிந்த தீய்ந்து புகைந்து
எங்கும் நொந்து கிடக்க, புழுதி படிந்த உடலும்
குருதி வடியும் முகமாய் குழந்தை ஒன்று
அழுது தாயை தேடுகின்றது,
இறந்த உடல்களை எழுப்பிட உரத்து அழுகின்றது

இறைவனும் மௌனமானன், அழும் குழந்தையாய்-
உருவற்ற வல்ல அல்லாவும் உருவெடுத்து
அமைதியின் மதத்தின் அருவெறுப்புகளை எண்ணி
அமைதி வேண்டி அழுகிறான் போலும்?

உருவற்றவனைத் தொழுவோர்
உறவுற்ற துன்பம் அறியவில்லை,
படைப்பலம் படைத்தவருக்கு
ஆண்டவனும் வேண்டியதில்லை?

ஷியா, சுன்னி யுத்தம் சிந்திடும் இரத்தத்தில்
வுழு செய்து தொழும் யுத்த வெறியர் நெற்றியில்
மண்ணும், மரமண்டையும் தொட்டதனால் வந்த வடு
தொழுகையும் அல்லாவைச் சேராத ஒழுக்கக் கேடு

ஹே அல்லா!

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-22-05-2023*

# தமிழா! தமிழா

ஒன்றே குலம், ஒருவனே தேவன்,
யாதும் ஊரே யாவரும் கேளீர்!,
ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு என
உலகிற்கு சொன்ன மூத்த இனம்
சேர, சோழ, பாண்டியராய்த் தம்முள் போராடி
தம்மைத் தாமே அழித்த இனம்.

உயிர் மெய்யாய்த் தமிழை போற்றி-மெய்யிலே
வல்லினம், மெல்லினம், இடையினம் கண்டு
உயிரொடு ஆயுத எழுத்தையும் கொண்டு
இயல் இசை நாடகம் என முத்தமிழை வகுத்து
சங்கம் அமைத்து தமிழ் வளர்த்த மூத்தகுடி

மொகஞ்சதாரோ, ஹரப்பாவின் ஆதிக்குடி
பொதுமறை திருக்குறளை உலகிற்கீந்த
பெருங்குடி நலிந்ததோ?

பல்லவரை வீழ்த்தி எழுந்த சோழர்-பின்
பாண்டியரையும், சேரனையும் வீழ்த்தி-கங்கையும்
கடாரமும், ஈழமும் வென்று பேரரசாகி-பின்நாளில்
சுந்தரபாண்டியனால் வீழ்ந்த சோகம்

நாயக்கரும், மராட்டியரும், நவாபுகளும் ஆண்டு –பின்
ஆங்கிலேயர் கைப்பட நலிந்த தேசம்
வறுமையால் நாறிட பல திக்கும் கூலிகளாய்
நாடான்ற இனம் போன அவலம்தான் என்னே?

பழம் பெருமை பேசி காலம் கழித்தவர்
குலப்பெருமை பேசிய சாதியம் வளர்த்தார்
ஊழல் மலிந்த தேசத்தில் அரசியலும் குடும்பச் சொத்தாகிட
கோடிகளை கொள்ளையிட்டு, ஏழை "வாக்கை"
மலிவாய் வாங்கி-தேர்தலில் ஜெயிக்கும்
சுயநல அரசியல் கேடிகளும் மலிந்தார்

நடந்தாய் வாழி காவிரி கால் விலங்கோடு
கன்னடத்தில் சிறையிருக்க
கங்கை கொண்ட சோழனின் நெற்பயிர்களோ
காவிரி நீரின்றி வாடி சோகத்தில் கருகிக்கிடந்தன.

கண்ணீரில் மூழ்கிடும் ஏழை விவசாயிகள்
கடன் தொல்லையால் தற்கொலை செய்திட
மௌனம் சாதிக்கும் மத்திய, மாநில அரசுகள்.

குடிசைவாழ் மனிதருக்கோ குந்திக்கழிக்க
கழிவறைகளில்லை, குடித்துச் சீரழிய
மதுபானக் கடைகளுக்கோ குறைவில்லை

அறியாமை, வறுமை தலைவிரித்தாட
மூடநம்பிக்கை வளர்ந்து சாதியம் ஓங்கிட-
அல்லலுறும் முதுபெரும் தமிழினம்

கல்தோன்றி மண் தோன்றாக் காலத்தே
முன் தோன்றிய மூத்தகுடி-
அருங்கலை பல வளர்த்த தமிழ்ப் பெருங்குடி
சினிமா கவர்ச்சியில் சிக்குண்ட மாயம்
அரசியலும், சினிமாவாய் மாறிட்ட அபாயம்.

பைந்தமிழ் கற்க மறுக்கும் தமிழினம்
மத்திய அரசுக்கு மண்டியிட்டு
சமஸ்கிருதம் வளர்க்கும் அரசாய்த் தமிழகம்?

செம்மொழி தமிழுக்கு விலக்களிக்கும் கல்வித்திட்டம்-
தமிழ் அன்னையைத் தமிழகமே நிராகரிக்கும் சதித்திட்டம்?.
மோடியின் கனவை நினைவாக்கும் பேடிகள்
திராவிட இயக்கத்திலோ வீரத் தமிழ் மறவர்கள்

இயக்கங்களாய் பிளவு பட்டு, இன ஒற்றுமையின்றி
தம்முள் போராடி, தமிழ் ஈழப்போராட்டமும்
பழங்கதையாய், கனவாய் கலைய
உலகெங்கும் அகதிகளாய் இடம்பெயர்ந்த
ஈழத்தமிழினம் ஐயகோ தமிழா!

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-22-05-2023*

# தனிமைச் சிறைகள்-Solitary Confinement

---

முப்பது சதுர அடி அறைக்குள்
தனிமையில் அடைக்கப்பட்ட-குற்றவாளிகள்
வானோ, நிலவோ, தென்றலோ, மரமோ
தெரியாத கூண்டுக்குள்-பல்லாண்டுச் சிறைவாசம்

பேசிட மொழி மறந்து-ஊமையாய்
விழிகாண வெளி உலகின்றி-பார்வையும் சூனியத்தில் நிலைக்க
உறவாட ஒரு உறவின்றி-தனிமையில் மனிதம் சிதையும்
கொடிய சித்திரவதை வாழ்வு

பார்க்கும் உலகு சுவர்களாகிட
பேசும் உலகு மனிதரின்றி ஊமையாகிட
வெறுமையில் ஜீவன் அழிய
மனோபலம் குன்றி மனிதம் சிதையும் நரகில்
தனிமையில் உண்டு, குடித்து, கழிவகற்றி
கூண்டுக்குள் நடைபழகி
விலங்காய் உருவழியும் மனிதம்

மனிதத்தை உளவியல் ரீதியில்
துன்புறுத்தும் கொடிய தண்டனைகள்
ஓ அமெரிக்கா
சுதந்திர பூமியே-உன் சொர்க்கத்துள்
ஏன் இந்த கொடிய நரகம்? சிற்றறைக்குள்
ஏனிந்தச் சிலுவை மரணங்கள்?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-22-05-2023

# தவமும் வரமும்

---

உயர் கல்வியை நாடினேன்-அவரோ
அறிவிலும் உயர்ந்தது, அறிதல்
உன்னையே நீ அறிவாய் என்றார்

காதலை யாசித்தேன், காதல்
தேல்வியை தந்து-கன்னியர்
காதலினும் என் அன்பு பெரிதென்றார்

பட்டம், உயர் பதவிகளை வாஞ்சித்தேன்
சிறு பதவி தந்து-எளிமையையும்
தாழ்ச்சியையும் கற்றுக்கொடுத்தார்.

செல்வம் தேடி நாடு கடந்தேன்
அழியும் செல்வம் உனக்கெதற்கு?
அழியாப் பெருஞ்செல்வம் உனக்குள்ளே
அறிவாய் என்றார்

தோல்விகளால் துவண்டவன் ஒளிந்திடத்
துறவறம் தேடினேன்
அன்னையே தெய்வம் அருட்பணி புரி என்றார்
ஞானத்தை தேடினேன்
சூனியமாய் என்னை மாற்றி மகிழ்வித்தார்

வெற்றியை ஆசித்தேன்
விசுவாச வாழ்வு உனக்கென்றார்

எல்லாம் தேடிக் களைத்தபின் ஓய்ந்திருந்தேன்-
குழம்பிய உள்ளம் தெளிவுபெற என்னுள்ளே பேரானந்தம்
என்னே நின்கருணை என் தந்தாய் என் இறைவா.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-22-05-2023

# தாயும் சேயும்

---

பார்வை மங்கி பற்கள் விழுந்து, கூன் விழுந்து கோல் தாங்கி,
கேள்வி குன்றி, தோல் சுருங்கி வாட்டம் கண்ட உடல் ஆட்டம் காண,
மூப்போடு, நோயும், சாவை அழைக்கும் காலம்
முதியோர் சாவுக்காய் காத்திருக்கும் தவக்காலம்

காப்பது கடினம் முதிய பெற்றோரை
கானகத்தில் கைவிடல் நளினம் - ஜப்பானிய
கலாச்சாரமோ மனிதம் அழிந்த ஊனம்

தன்னந்தனியே கானகத்து மரநிழலில் கூடுகட்டி
மனத்துயரரை கண்ணீரில் கரைத்து
புல் பூண்டால் பசி போக்கி-படும் வேதனையைப்
பகிர யாருமின்றி, அழுது புலம்பி
காட்டு விலங்குகளுக்கு உணவாகும் வாழ்வில்
கண்டது எல்லாம் வெறும் கனவு
தாய் பிள்ளை உறவோ மாயையான நிகழ்வு

தொப்பிள் கொடியுறவும் தூக்குக் கயிறாக-
கண்ணீரும் கல்நெஞ்சை கரைக்காத நீராக
கானக வாழ்வு கல்லறைத் தோட்டமாகும்.
காட்டு விலங்குகளுக்கு உடல் உணவாகும்

பாலூட்டிச் சீராட்டி வளர்த்தவளை, தூக்கம் துறந்து காத்தவளை-
தன் பசி மறுத்து பிள்ளைப் பசியாற்றியவளை, தூங்கிட மடி ஈந்தவளை,
முதுமையில் தள்ளாடும் தாயைக் கானகத்தில் கைவிட
கல்நெஞ்ச மகனும், கனி நெஞ்சத் தாயும் கானகம் சென்ற கொடுநாள்.

பல மணி நேரம் நடந்தபின் பாசமில்லா மகனும் கடிந்தான் தாயை
“வேகமாய் வாங்க, நான் வீடு போகவேண்டும்”
மனைவியும், மகனும் எனக்காய் காத்திருப்பார்”

பாலோடு, வாழ்வையும் பகிர்ந்தவள், பரிவையும், அன்பையும்,
பாசத்தையும் கொட்டி வளர்த்த ஏழை, மெழுகாய் தன்னை எரித்து
வாழ்வு கொடுத்த மாதா கொடுமை கண்டு குமுறியழுதாள்.

தள்ளாமை தண்டித்த உடல் தள்ளாடத்-தனிமையில்
வாழ்ந்து இறக்கும் எண்ணம் இதயத்தை துண்டாட
முன் சென்ற மகனைப் பின் தொடர்ந்தாள்-வாழ்வின்
கொடிய நியதி இதுதான் எனக் கண்ட மூதாட்டி

அடர்ந்த கானகத்தே அருமை மகன் முன் நடக்க
ஆடி அசைந்து தள்ளாடித் தாய் பின் நடக்க-
முதியவளோ கடந்த பாதையெங்கும்
இலை குழைகளை பிடுங்கிப் போட்டு கால்களை
இழுத்து இழுத்து மெல்ல நடந்து வந்தாள்.

என்ன வேலை இது? ஏனிந்த அகங்காரம
இலை குழை பிடுங்ாமல் வரமாட்டாயா? மகன் கடிய,
மனங்குழையப் பொக்கை வாய் தெரியச் சிரித்த-அன்னை.

“என் மகனே, ஆளரவம் இல்லாத அடர்ந்த கானகமோ பெரிது
இன்னும் சிறிது நேரத்தில் இருள் சூழ்ந்துவிடும்
வீடு திரும்பும் நீ வழிதவறி அல்லாட நேரிடும்-
அம்மா போட்டு வந்த இலை குழைகளைப் பார்த்து நட
வீடு வந்துவிடும்-என் மகனே பத்திரம் கவனமாய் வீடு போய்ச் சேர்”

கலக்கமின்றி வந்த வார்த்தைகள்
கல்லான நெஞ்சைக் கலங்கடிக்க
கல்நெஞ்சும் பனியாய் கரைந்துருக
கதறினான் “அம்மா, அம்மா” என்று

அழுதவனை மடியிலிருத்தி ஆறுதல் மொழிந்த அன்னை
விரைந்து போ அந்தி மயங்கும் நேரம் அச்ச மூட்டுகின்றது

கொடும் விலங்குகளின் உறுமல்கள் நெஞ்சை கொல்ல
மாரி மழையாய் விழிகள் நீரைச் சிந்த
கொடிய முடிபு ஒரு நாள் எனக்கும் வரும்-எண்ணமே
அச்சத்தை தர-ஐயகோவென்று கதறி
பிழை பொறுப்பாய் தாயே என அழுதான் பிள்ளை

அரவணைத்த தாயை ஆசை தீர முத்தமிட்டு
ஆனந்தமாய்த் தோளில் சுமந்து வீடு நோக்கி
அன்னை காட்டிய வழியே நடக்கின்றான் அன்பு மகன்

அன்புறவு என்றும் நிலைக்க அராஜகக் கலாச்சாரம் மறைய
அன்பினால் உள்ளங்களை ஆட்கொள்வாய் இறைவா என்றே
ஆண்டவனை வேண்டி நின்றாள் அன்புத் தாய்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-22-05-2023

# தோமஸ் அல்வா எடிசன்

---

ஞானிகளையும், புத்தர்களையும்,மீட்பர்களையும்,
நபிகளையும் வணங்கி போற்றிடும் உலகில்,
மானுடத்தை பிரிக்கும்-மதச்சுவர்கள்-
ஆன்மீக ஒளியில்லா இருண்ட இரவுகள்

மதவாதம் வளர்ந்திட, உள்ளொளி ஏதுமின்றி
இருள் சூழ்ந்திட குருடர்க்கு குருடர் வழிகாட்டி
யுத்தம் புரிந்து இரத்தம் சிந்தும்
கொடிய மதப்போர்கள்.

அற்புத மனிதர் தோமஸ் அல்வா எடிசன்
ஏற்றிய விளக்கு-இன்றும் எரிந்திட
எந்த மத, இன, மொழி, நிற பேதமின்றி
எங்கும் ஒளி

ஒரு விளக்கேற்ற ஓராயிரம் பரிசோதனைகள்
சளைக்காமல் புரிந்த மாமனிதன்
மானுடத்தின் இருள் அகன்றிட
இராப்பகலாய் உழைத்த புனிதன்.

எரியும் விளக்குகள் எல்லாம்
மானுடம் ஒளி பெற
உன்னத மனிதன்-ஏற்றிய தீபங்களே.

மசூதிகளிலும், கோயில்களிலும், விகாரைகளிலும்,
ஆலயங்களிலும்-ஆஸ்திககர், நாஸ்திகர் இல்லங்களிலும்
எரியும் விளக்கெல்லாம் இருமை கடந்த மாமனிதனை
எண்ணிப் போற்றுங்களே!

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-22-05-2023

# தூங்காத கண்கள்

---

நாணம் பூண்ட நங்கையின் நளினம் செவ்வானம் காட்ட,
ஊடல் கொண்ட காதல் நெஞ்சமோ பேரழகிற்கு புதுவண்ணம் சேர்க்க,
காதல் கொண்ட ஏழை மனமோ காற்றில் முல்லையாய் அலைய,
பாரி வள்ளல் மகளும்- காதல முல்லைக்கு
பாரியாய் இதயத்தேர் ஈவாளா?

உண்ணும் போதும், உறங்கும் போதும் அவள் நினைவே
உதிரமாய் ஓடுவதும், உயிர்மூச்சாய் உலாவுவதும்
என்னுள் அவள் கனவே

கனவாகி, நினைவாகி விரிந்தவளே
கண்ணுக்கும், நெஞ்சுக்கும் விருந்தானாள்
காதல் மலராய் பூத்தவளே என்னைச் சூடி மகிழ்ந்திட
காதல் இசைத்தவளே என் கவிதையானாள்

காதலாகி நின்றவளோ கனவாகிக் கலைந்திட
காதலனோ தேவாதாஸாய் உருக்குலைந்திட
உயிரையும் மெய்யையும் ஆட்கொண்ட காதல்புலத்தில்-
ஊசலாய், ஓயாது ஆடித்தவிக்கும் ஏழை மனம்

விழிகளிலோ கண்ணீர் ஓடை-முகத்திலோ
கவலைக் காளான்களாய்த் தாடி, மீசை
பனியாய் உருகும் காதல் மனம்.
என் உலகு நிலவில்லா வானம்

தூங்காத கண்களும், துடிக்கும் நெஞ்சமும்-
உயிரே உனக்காய்த் தவமிருக்க
ஏனடி என்னைத் தவிக்கவிட்டாய்? என் பார்வதி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-22-05-2023

# திரௌபதி

---

திரௌபதி,
தந்தை துருபதன் யாகத்தில் பிறந்த
அக்கினிப்பூ-தியாகத்தால்
பாண்டவர் ஐவரை சூடிய அதிசயப்பூ




ஒருவனுக்கு ஒருத்தி-என்ற காதல் தனியுடமைச் சமூகத்திற்கு
சவாலாய், ஐவரைக் கரம்பிடித்த அதிசய மங்கை
குந்தியின் வார்த்தை மந்திரமாக, மைந்தர் ஐவருக்கும்
மாலையிட்ட கோதை
மங்கையவள் வாழ்வோ காதலின் அபூர்வ கீதை

பாயுமிடமெல்லாம் செழிப்பூட்டும் நதியாய் பாஞ்சாலி நீயடி
பாண்டவர் நெஞ்சத்தில் வீசும் காதல்தென்றல் நீயடி.
தாய் வழிச்சமூகத்தின்-கடைசி தனிப்பெருஞ் சொத்தும் நீதானடி

வளமான அரண்மனை வாழ்வும் வனவாசமும் ஒன்றென்று –எம்மோடு
வனம் வந்த சீதை, நீ வாழ்விலும் சாவிலும் பிரிக்கமுடியாத உறவென்று
மரணம்வரை -எம்மோடு நடந்துவந்த காதல் கீதை

முள்ளிலும், மலர்ப்பாதையிலும் நடந்திட்டபோதும்
நெஞ்சம் வாடாத மலர், கனியும், கிழங்கும் புசித்து
கட்டாந்தரையில் உறங்கிட்டபோதும்
நெஞ்சம் கலங்காத காதல் மலர்



மகாராணியாய் அரியணை அமர்ந்தபோதும்
மமதை கொள்ளாத உள்ளம்- எம் ஐவருக்கும்
வாரிசு தந்த தாய்மையின் தூய உள்ளம்.

ஐம்புலன்களையும், ஆறறிவையும் தாண்டி-
காதலால் எம்மை மகிழ்வித்தாய்-உன் பேரழகால்
கௌரவரையும் கலங்கடித்தாய்.

அவையில் துயில் களைந்தபோதும்-ஆரண்யத்தில்
மலர்ப் பாதங்களை முள் தைத்தபோதும்
ஆற்றாமையால் எம் நெஞ்சில் உதிரம் வடிய
எம்மால் நேர்ந்த கொடுமை எம் பெருமானால் தீருமென்றே
கண்ணனை கூவியழைத்து கற்பின் பெருமை காத்தாய்.

வற்றிடும் நதிகளும் காய்ந்திடும் குளங்களுமாய் மாறிடும்
வரண்ட காதல் உலகில் பருவமெல்லாம்
காதல் மழை பொழிந்த தேவமங்கை நீயடி
பருவங்கள் மாறும் உலகில் மாறாத காதல் வசந்தமும்
வற்றாத காதல் கங்கையுமாய் உன் காதலடி

ஆடை களைந்திட்டபோதும் அவிழ்ந்த
கூந்தலை-துச்சாதனன் குருதியால் வாரி
முடிந்திட்டபோதும் குலையாத கற்பு
கண்ணனிடம் கொண்ட மாறாத தூய நட்பு

வெறும் ஆண் பெண் உறவல்ல காதல்,
உண்மைக்காதல் வெறும் -இரு உள்ளம் சார்ந்த ஒன்றல்ல.
காதல்-காரணமும், நோக்கமுமின்றி மலரும் அன்பு மலர்
காதல் இல்லாத வாழ்வில் ஏனிந்தத் திருமணம்?

மலர்ந்து உதிரும்வரை-வற்றாத தேனால் வண்டினங்களுக்கு
உணவளித்து காதல் சொல்லும் வாசமலர்,
ஓடி கடல் சேரும் வரை வாடிய பயிர்களின் தாகம் தீர்க்கும்
கங்கை- இதுதான் காதல்

மலர்ந்த மனம் உடைமை கொள்ளாது
விரிந்த இதயமும் காதல் கொள்ளத் தயங்காது.
***காதலே கடவுள்-காதலே வாழ்வு***

காதல் இல்லா வாழ்வில் திருமணமும் சிறையே
காதல் இல்லா மனங்களுக்கு மாங்கல்யமும்
மனைவி கழுத்தில் கணவன் மாட்டிடும் மஞ்சள் கயிறே

காதலில்லாச் சீதனக் கல்யாணங்களும் காலம் செல்ல
புரிந்துணர்வின்றி முறிந்து-விவாகரத்தில் முடிந்திட
மாங்கல்யமும் அறுத்துக்கட்டும் வெறும் கயிறாய் மாறிட
மணவாழ்வும் வாடிடும் மலராய் ஆகிடும் உலகில்
ஐவருக்கு மனைவியாய் மனம் கோணாமல் வாழ்ந்த
மாதரசி திரௌபதியின் மாசில்லாக் காதல் அதிசயமே!

ஓ மனிதர்களே காதலை புரிந்து கொள்ளுங்கள்
ஒருவரை ஒருவர் அடிமை கொள்ளாத உறவே காதல்
புரிந்தால் காதலியுங்கள்-காதலே சுதந்திரம்.

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-22-05-2023*

# வேண்டுதல்

---

அன்பே உன் பெயரை -என் பெயரோடு
ஒன்றாய்ச் சேர்த்தெழுதிடும் மணவாழ்வு தருவாயா?
உயிரோடு கலந்த மெய்யாய் முத்தமிழாய் நாம் வாழ
உன்னோடு நான் கலந்து நானே நீயாகி
நீயே நானாகி நாம் வாழ வரம் தருவாயாய?

மஞ்சளும், குங்குமமும், மலரும் சூடி
மங்கல நாயகியாய் நானும்
மணாளனாய் நீயும் மாலை சூடி வாழும்
பெருவாழ்வு தருவாயா?

பெயர் சொல்லப் பிள்ளையும்
அம்மா என்றழைக்க உறவும்
கண்ணாளா தருவாயா?

கனிவோடு கேட்ட காதல் அஞ்சுகம்
மன நிறைவோடும், காதல் மனதோடும்
மகிழ்ந்தே இதயம் ஈந்து இன்புற
என்னே எம் பெருஞ்சுகம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-23-05-2023

# வேதங்கள்

---

கடவுள் இறந்து விட்டார் -நீட்ஸே கூவிட
அபினியும், போதை வஸ்தும் மதம்
கார்ல்மார்க்ஸ், இங்கஸார்ல், லெனின் பறைசாற்றிட
மதங்களின் இருண்ட பாதையில்
மார்க்ஸியத்தின் சிவப்பு வெளிச்சம்
மார்க்ஸியத்தின் குருதி வெள்ளத்திலோ
மடிந்த ஜனநாயகத்தின் எச்சம்

கண்ணுக்கு கண்-பல்லுக்கு பல், உயிருக்கு உயிர்-
இதுதான் நீதி, பண்டைய வேதத்தின் உபதேசம்
குருஷேத்திரத்தில் புதிய கீதா உபதேசம்.

## இந்து மதம்

கடுகளவு உண்மைகள்-கடலளவு கற்பனைகள்
புராணங்களில்- குறியீடுகளைப் புரிந்தவர்
கொஞ்சம்- மதவாதம் பேசியவரோ மிச்சம்

ஆயுதம் தரித்த தெய்வங்கள் அசுரர்க்கு வரம் கொடுப்பதும்
தேவர்களைக் காத்திட -தீவிர யுத்தங்கள் புரிவதும்-
திராவிடரை ஒடுக்கிடும் ஆரியக் கற்பனைகளோ?

பிரம்மா, இந்திரன், சந்திரன், யயாதி  இத்தியாதி
என தொடரும் காமசேஷ்டைகள்
கடவுளரும் விதிவிலக்கின்றி பெண்
இன்பம் தேடும் காமக் களியாட்டங்கள்

அப்ஸரசுகளின் ஆட்டங்கள்-தேவர்களை காத்து-
தவசிரேஷ்டர்களை வீழ்த்திடும்
காம-தாந்திரா கலைவடிவங்களோ?

சாதியம் ஒழிந்திட, ஏழ்மையும். அறியாமையும் நீங்கிட
சமத்துவம் நிலைத்திட அவதாரங்கள் இல்லை
சமஸ்கிருதம் தேவமொழி எனப் போற்றி
செம்மொழி இன்ப தமிழுக்கும், எந்த இந்திய மொழிக்கும்
இந்து ஆலயங்களில் ஏனோ இடமில்லை

சமணமும், பௌத்தமும் நலிந்து நாட்டை விட்டோடிட
நலிந்த சைவமும், வைஷ்ணவமும் அரியணை அமர்ந்திட,
மதப்பூசல்கள் தொடர்ந்திட, சாதியம் புறக்கணித்த மானுடத்தை
இஸ்லாமும், கிறிஸ்தவமும் அரவணைத்து வேர்கொண்ட நிலை

“ஹிந்து” என்ற சொல்லோ-எந்த வேதங்களிலும் இல்லை
அவதாரங்களிலும் அசுர வதை பாடும்
தேவகானங்கள்-சாதியம் நிலைக்க
பிராமணியம் காக்க புதிய பிரச்சாரங்கள்

புராணப் புளுகெல்லாம்- தொலைகாட்சித் தொடர்களாக,
இந்திரன், சந்திரன் சல்லாபங்கள்
தணிக்கை குழு தாண்டிய பாலியல் சேட்டைகளானது

ஆழ்ந்த உண்மை சொல்லும் குறியீடுகளும்-
ஆண்மையிழந்த அவலங்கள்
அர்த்தமிழந்த புராணங்களும்-கற்பனைக்
கதைகளாய்போன சமாச்சாரங்கள்.
சனாதன தர்மத்தில், சைவம், வைஷ்ணவம்,
சாக்தம், கணபதியம், கௌமாரம், சௌரம்
ஏகம் ஸத் விப்ரா பஹுதா வதந்தி-வெற்றுச் சத்தம்

## யூத மதம்

பாரோவையும்-எகிப்தியர்களையும்
வாட்டுவதில் தொடங்கி-வதைப்பதில் முடிந்த கதை
உலகின் முதல் மதப் பயங்கரவாதியாய் யாவே

இஸ்ராயேலருக்கு நாடு கிடைக்கும் வரை தொடர்ந்த
ஓயாத யுத்தங்கள்-ஆறாய் ஓடிய இரத்தங்கள்
இன்றும் எரியும் பாலஸ்தீனம்-தொடரும்
இஸ்ராயேல் பலஸ்தீன யுத்தம்

மோசே முதல் கிறிஸ்து வரை, விவிலியமெங்கும்
யுத்தம் சிந்திய இரத்தம் மத்திய கிழக்கில் அமைதி
கனால் நீரான அவலம், பறிபோன நிலத்திற்காய்
பாலஸ்தீனியர்களின் இரத்தம், பலவந்தமாய்ப் பறித்த
நிலத்துக்காய் யூதர்களின் யுத்தம்.

பாலுந்தேனும் ஓடும் வாக்களிக்கப்பட்ட பூமியில்
நாளும் சிந்தும் கண்ணீரிலும், இரத்தம்

அறுபது இலட்சம் யூதர்களை-ஆரிய ஹிட்லர்
வதைத்திட, ஆபிரகாமின் ஆண்டவனும்
விஷவாயுக்கஞ்சி ஒளிந்த அவல நிலை?

வேதங்கள் சிந்திய குருதியில் மதக்குரோதங்கள்-
உலகம் காணாத மனித அவலங்கள்
ஆண்டவன் சந்நிதியில்அமைதியில்லை
மானுடத்தை பிளவுபடுத்தும் மதங்களோ
அபினியாய்-போதை வஸ்துக்களாய் மாறிட்ட அவல நிலை
வாக்களிக்கப்பட் பூமி, இறை தேர்ந்த குலம்
எல்லாம் வரண்ட மதத் தத்துவம்

## பௌத்தம்.

அமைதி கண்ட அகிம்சா மூர்த்தியோ
போதி மரநிழலில் அமர்ந்திட-
ஆட்சி, அதிகாரங்களுக்காய்-ஆசை கொண்ட
பௌத்த பீடங்களோ-பிக்குகளை தூண்டிட
ஈழமெங்கும் இரத்தம்.

தமிழர்களும், முஸ்லீம்களும்
தம்முரிமை இழந்து-அஞ்சி ஒடுங்கிட
காவிகளின் அட்டகாச ஆராவாரம்

புத்தபெருமானையும் கற்சிலையாக்கி
அகிம்சை துறந்த பேரினவாதம்
அவதியுறும் சிறுபான்மையினம்.

நாடு கேட்ட தமிழரும்-நாதியிழந்து அகதிகளாயிட
சீவர ஆடைகளும் ஈழத்தமிழன் குருதியால் சிவப்பாகிட-
அரக்க அங்குலிமாலாவாய் புத்தரின் சீடர்கள்-தம் போதனையே-
தம்மபோதனையாக சிங்களப் பேரினவாதம்

பர்மிய ரொகின்ஜா முஸ்லீம்களை கொன்று குவித்து,
உடமைகளை எரித்து பெண்களை பலாத்காரம் செய்து சீரழித்த
கொடுமை உலகை உலுப்பிட, நான்கு இலட்சத்து ஐம்பதினயிரம்
மக்கள், பங்களாதேஷிக்கு அகதிகளாய் ஓடிட, தூங்கிட்ட
பர்மியரின் துயில் எழுப்பும் இனவாதப் பிரித் ஒலிகள்.
அஞ்சி ஒடுங்கிட்ட பள்ளிவாயில்களின்
வாங்கொலிகள்.

கற்சிலையாய் மாறிட்ட புத்தர் சிலைகள்
கல்லான இதயங்களோடு
இனவாதம் பேசிடும் புத்த நிலைகள்

## கிறிஸ்தவம்.

அடிமைகளின் மதம்-ரோம சாம்ராஜ்ய
அரியனை அமர்ந்ததும் சர்வாதிகாரியான அவலம்,
அரசுகளை அச்சுறுத்தி மதப்பிரிவினைக்கு வித்திட
புரொடஸ்டான்ட- அங்கிலிக்கனாய்
பிளவு பட்டு-இன்றும் பல்லாயிரமாய்ப்
பிளவுபட்ட கிறிஸ்தவம்.

அடிமைகளுக்கு உரிமை வாழ்வை மறுத்து
என்றும் அடிமைகளாய் வாழ-அதிகாரத்திற்கு மண்டியிட்ட
புனித பவுலின் அசிங்கப் பிரச்சாரங்கள்
பவலால் பாதை மாாறிய கிறிஸ்தவத்தில்
கிறிஸ்துவுக்கு இடமில்லை-

சிந்னையாளர்கள் அஞ்சி ஒடுங்க-கலிலீயோ கலிலீ
நகைத்துப் பணிந்திட- சிதைகளில்-பெண்களை
பில்லி சூனியக்காரிகளை எரியவிட்டு அச்சக் குளிர்காய்ந்தவர்கள்-
வத்திகானாய் அரசு ஒடுங்கும் வரை ஆடிய சூதாட்டம் ஆட்டம்
-இயேசு கிறிஸ்துவை மீண்டும் சிலுவையில் அறைந்த
பாரிய கொண்டாட்டம்.

முதலிரண்டு உலக மகா யுத்தங்களில்-நாறிடும் இராஜதந்திரம்
நமனுக்கு சாதகமான வேதமந்திரம்.

சிறுவர் துஷ்பிரயோகம், பாலியல் முறைகேடு ,
போதை பொருள் பணம், இன்னும் பலவற்றால்
புகழிழந்து புழுதியில் விழுந்தவர்
இயேசுவை முத்தமிட்டு காட்டிக்கொடுத்து,
அஞ்சி மறுதலிக்கும் அவலநிலை

பாதை மாறிய பயணத்தில் ஊதாரிமைந்தன் மனந்திரும்பி
தந்தையிடம் வரும்வரைக்கும் தொடரும் பன்றி மேய்க்கும் இழிநிலை.
சிலுவைப் போர்களால் நாறிய மதம் அன்பே இறைவன
˙- உண்மையைக் காட்டிக் கொடுத்து. மறுதலித்த சீடத்துவம்

# இஸ்லாம்

வாளெடுத்து போர் புரிந்து வாகை சூடியவர்கள்
ஆட்சியுரிமைகாய், ஷியா- சுன்னியாய் பிரிந்திட,
அதிகாரத்திற்காய் தொடங்கிட்ட யுத்தம்
மத்திய கிழக்கை எரியச்செய்யும் நித்தம்

அல்லாகு அஃக்பர் வெற்று கோஷமாய் முழங்கிட
ஆண்டவன் பேரில்-ஜிகாத்தாய் தொடங்கிட்ட யுத்தங்கள்
பள்ளிவாயில்களையும் பழிவாங்கிட, வல்ல அல்லாவை
கூவியழைக்கும் விசுவாசிகளின் இரத்தங்கள்

இஸ்லாமிய தீவிரவாதம் உலகை அச்சுறுத்த
அமெரிக்க-ஐரோப்பிய கண்டங்களில்
ஒலிக்கும் குண்டுகளின் சத்தம் அல்லாவைப் புண்படுத்த-
ஜிகாத்துக்கு புது விளக்கமளிக்கும் மதப் பயங்கரவாதம்

மதப் பயங்கரவாதம், சாத்தானின் வேதம்
நாறி மணக்கும் பிணங்கள், இன்னமும் ஆறாத
அப்பாவிகளின் ரணங்கள்,விதவைகளின் கண்ணீர்,
மழலைகளின் அழுகுரல், மாறாது ஒலிக்க-
காதை செவிடாக்கும் குண்டுச்சத்தங்கள்.

தொழுகைக்கு அழைக்கும் வாங்கொலிகள்
தொழுதிடப் பள்ளிக்கு செல்ல அஞ்சும் விசுவாசிகள்
பள்ளிகளிலும் ஷியா சுன்னிப் பயங்கரவாதங்கள்
இஸ்லாத்தை நிந்திக்கும் ஆயுதமோதல்கள்

“சலாம் அலேக்கும்” சாரமற்ற உப்பானது,
தொடரும் யுத்தமோ தர்மத்திற்குப் புறம்பானது.
***மதம் போதை தர,*** எண்ணெய் தந்த செல்வம்
எரிநரகாய் மாறும் பாலை உலகம்
நிலமும்., மதமும் , தொடுக்கும் கோரயுத்தம்
நித்தம் சிந்திடும் மனித இரத்தம்

“ஷலோம்” - “சலாம் அலேக்கும்”-சாரமற்ற உப்பாய்
சம்பிரதாய வாழ்த்தாய் மாறிய அவலம்.
யுதம், கிறிஸ்தவம், இஸ்லாம்-ஒரு மரத்தின் கிளைகள்
ஓயாத யுத்த நிலைகள்?

அழுகைச் சுவராய் உருவழிந்த ஆலயம், அறுபது இலட்சம்
மக்களை பலிகொடுத்த யூத இனத்திற்கு ஆறுதலின் சின்னமாகி
யூதவரலாற்றின் அங்கமாகிட, அல் அக்ஸா பள்ளியோ,
இஸ்லாமின் அடையாளமாய் பாலஸ்தீனரின் இதயமாய் மாறிட,
ஜெருசலேம்-சமாதானத்தின் பூமி- ***எரியும் முட்செடியான சாமி***

இறைவன் ஒருவனே என முழங்கும்
அல்லாகு அக்ஃபர் கோஷமும்
அன்பே தெய்வம் என்ற மந்திரமும்
அர்த்தமிழந்து, அமைதியைப் பறித்திட
தொடரும் யுத்தங்கள், சிந்தும் இரத்தங்கள்

இராமர் கோயிலும்- பாபர் மசூதியும்
அழுகைச்சுவரும்-அல் அக்ஸா பள்ளியும்
ஆண்டவன் வாழிடங்களோ-வெறும்
மானுடத்தை பிரிக்கும் மதவாதச் சுவர்களோ?

அன்பிற்கு ஏது மதம்? உண்மைக்கு ஏது மொழி !
எது மதம்? எது மார்கம்? எல்லாம் மாயையான அவலம்
மதம் கடந்த ஆன்மீகம்- தனிமனிதப் பயணம்

விழித்தெழு மனிதா-ஆஸ்திகம் புரிந்த கொடுமை அதிகம்
நாஸ்தீகனுக்கு அன்பும், உண்மையும், பகுத்தறிவும் தெய்வம்
மதம் கடந்த ஆன்மீக வாதி நல்ல சமாரித்தன்
அன்பே சிவத்திற்கு சாதி. மதம், நிறம், இனமில்லை
உன்னதங்களில் இறைவனுக்கு மகிமை- உலகில்
நல்மனத்தவருக்கே அமைதி

கட உள்ளே கடவுள் நீ-அஹம் பிரம்மம் அஸ்மி
மதம் கடந்த தூய மனத்திற்கே சத்திய தரிசனம்
ஆணவம் கழித்த எளிய மனதிற்கே இறையரசு

மதம் கடந்த ஆன்மிகத் தேடல்-தனி மனிதப் பயணம்
கல்லை அப்பமாக்கி- அப்பத்தை கடவுளாக்கி வழிபடுதல் அவலம்.
உண்மையே உங்களுக்கு விடுதலை அளிக்கும்-உனக்கு நீயே ஒளியாகிப் போ,
புத்த நிலை, கிறிஸ்து நிலை, கிருஷ்ணா நிலை உள்ளுணர்வின்
உயர் நிலை- அது உனக்குள்ளே-ஓம்! ஓம்! ஓம்!

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-23-05-2023

# விழிப்பு

---

அங்கங்கள் கவர்ச்சி காட்ட
ஆண்மனங்களோ காமக்கிளர்சி கொள்ள
மதிப்பதற்காய் அணியும் ஆடைகள்
மயக்குவதற்காய் மாறிட்ட சிறுமைகள்

பருவமோ பரவசமூட்ட, பாலியலோ பேரின்பமாக
**காமத்தீயில்** விட்டில்களாய் விளையாடி
விழுந்து மடிபவை உணர்வின் அடிமைகளே
கருப்பையை குப்பைத்தொட்டியாக்கி
கருகலைப்பு செய்பவை ஏமாந்த பேதைகளே

தூய மனம் தெய்வீகமே-இச்சிக்கும் எண்ணம் கூட
இயேசுவின் பார்வையில் விபச்சாரமே
ஆணினமே பெண்மையை மதித்து போற்றுங்கள்

பெண்மையே விழித்தெழு
சுதந்திரம்  உன் உரிமைச்சொத்து
எழுவதும், வீழ்வதும் உன் கையில்
விழிப்புணர்வே சுதந்திரம்

சீதையாய் தீக்குளித்த காலம் -**ஸ்ரீராமனோடு** மறைந்திட,
கண்ணகியாய் மதுரை எரித்த காலம் நீதிக்கு எச்சரிக்கையாக,
பாஞ்சாலியாய் குருதி பூசி கூந்தல் முடிந்த காலம்
ஆள்வோருக்குப் படிப்பினையாக, தடைக்கல் எல்லாம்
படிக்கட்டாக புதுமைப் பெண்ணாய் எழுந்து வா
தாய்மையே தெய்வீகம்

ஆணியச் சிறைக்குள் அடங்கிய காலம் கழிந்துபோனது
பெண்மையின் புரட்சி, தாய்மையின் மகிமையானது
அடக்கி ஆள மாங்கல்யம் பொன் விலங்கானால்
அறுத்து எறி-கைமை உனக்கு கால் விலங்கானால்
கானக்குயிலாய் கானம் பாடி எழுந்து பற
வானமே எல்லை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-23-05-2023